கொண்டமையிலும் தான்கண்டதையுமதன் அபுத்திமையையுமிந்த
ப்பிரமைகொண்டு மிகவுந்துக்கமாய்ச்சாப்பாடுமுதலியயாவும் வெறு
த்துவிட்டான் அந்தத்தட்டான்பெண்சாதி மெத்தகெட்டிக்காரியும்
யோசனையுள்ளவளுமாகையால் தன்புருஷன் ஒருஸ்திரீயைப்பார்த்
தாசைகொண்டானென்று அதன்காரணத்தைத்தெரிந்து குஞ்சிரிப்புடன்
நகைத்து என்னுடையபத்தாவே நீரிப்போதிருக்கிறநிலைபெறும்ப
டியாய் விரகசன்னதமேற்றிவைத்தவர்யாரென்றும் எந்தத்தெய்வ
லோகத்துரம்பையைக்கண்டு மோகப்பட்டீரென்று அதெனக்குத்
தெரியச்சொன்னால் அதற்குநான்புத்திசொல்லுகிறேனென்றும்மற்
றஸ்திரீகளைப்போலே உம்மைஅபாயப்படுத்தவும் கோபிக்கவுமாட்
டேனென்றுசொன்னதுதவிர அவள்பேருமூரும் வீட்டின் அடை
யாளமும் என்னசொன்னாளென்றுகேட்டாள் அதற்கந்தத்தட்டான்
பெண்சாதி மெத்தவும்தயவாய்க்கேட்பதைக்கண்டுகலீரெனநகைத்
து ஓகோளனதின்பமுள்ளஸ்திரீயே ஒருபருவநாயகிவந்துசெய்தசி
லகாரணங்களால் என்னறிவுதவறி தப்பிப்போச்சுது அன்றுமுதலி
ன்றையவரையிலும்எனக்கொருவிதத்திலும் மனம்சமாதானப்
படாமலிருக்குது அந்தஸ்திரீயினுடைய வீட்டினடையாளத்தைக்கே
ட்டதற்கு ஒருகண்ணாடியைக்காண்பித்தா ளப்பாலந்த கண்ணாடியி
ல் கரியைப்பூசிக்காண்பித்து அவ்விடத்திலிருந்த தண்ணீர்த்தொட்
டியில்சில மாதளயிலையைப்போட்டுவிட்டுவீட்டுக்குப்போய்விட்டா
ள் அதனால் என்னுயிருமுடலுந்துடிக்கிறதென்றுசொன்னான் அதை
க்கேட்டஅவன்பெண்சாதிகொக்கரித்துசிரித்து இவ்வளவுஅற்பகா
ரியங்களின்தாற்பரியம்தெரியாமலிருக்கிற நீரெவ்விதமாய்மோகமு
ங்காமமும் கொண்டாடப்போகிறீரென்றுசொல்லி பரியாசஞ்செய்
துநான்சொல்லுகிறேன் ஓநாயகாமுதலில்கண்ணாடிகாண்பித்ததுபக
ல்வெளிச்சத்தில் வீட்டைவந்துபார்க்கும்படிக்கு கரியைத்தடவிக்
காட்டியது இராத்திரிவீட்டுக்குவரும்படிக்கும் தண்ணீர்த்தொட்டி
யில் மாதளஇலையைப்போட்டது தன்வீட்டுக்குமுன்பாகஒருதெப்
பக்குளமிருக்குதென்றும் அந்தக்குளக்கரையில் ஒருமாதளமரமிரு
ப்பதென்றும் அம்மரத்தினிலைகள் அந்தக்குளத்தினுள்ளசலத்தில்வி
ழுந்திருக்கிறதென்றும் குறிப்புக்காட்டியிருக்கிறாள் ஆகையால் நீ
ரெழுந்திருந்து தந்தசுத்திசெய்து சாப்பிட்டு அலங்காரத்துடன்செ
ன்றுமேற்சொன்ன அடையாளத்தைத்தெரிந்துகொள்ளுமென்றாள்
அதைக்கேட்ட அந்தத்தட்டான்மிகவுஞ்சந்தோஷப்பட்டுவிடைவிற்
சென்றுவீடுபார்க்கப்போய்விசாரித்தான் அந்தவீடு அப்பட்டணத்து
ராசா முதல்மந்திரியின் வீடானதாலும் அதுவன்றிஅவ்வியமனி

தர்கள் போகந்தாரததாயுமிருந்ததைக்கண்டு வருந்திவிசாரப்பட்டு
தன்னுடைய ஸ்திரீயினிடத்திலிவ்வந்துசொன்னான்.

அதைக்கேட்ட அந்தஸ்திரீயானவள் நீஎவ்விதமாய் அவள்பே
ரில்மோகங்கொண்டிருக்கிறீரோ அதைப்பார்க்க அதிசயமாகஉம்மு
டையபேரில் அவள்மோகங்கொண்டிருக்கிற ஆசையைக்காட்டிப்
பொறுவதிலேதாவும்முடையகடைக்குஅவள்வந்தது கொடியமோ
கமென்பது இளவயதாகையால் எவ்விதமுமவள்உம்மைச்சேருவாள்
அதைக்குறித்துநீர்யோசிக்கவேண்டாம் இப்போது ஸ்நானம்பண்
ணிபோசனமுண்டுதாம்பூலந்தரித்துக்கொண்டு ஆடையாபரணங்க
ளுடன்சென் றவள்வீட்டுக்கருகில்காத்திருந்தால் அவளெவ்விதமும்
காமத்தைவஞ்சிக்காமல் ராத்திரிவேளையில் உம்மிடத்திற்கு வருவா
ளென்று ளதைக்கேட்டு அந்தத்தட்டான் அவள்சொல்லைத் தட்டாத
வனாய் உடனே அப்படியேபோய்க்காத்திருந்ததில் அவ்விடத்திலடித்
தகுளுங்காற்றினால்நித்திரைபோய்விட்டா னப்பா லந்தமந்திரியின்
பெண்சாதி அந்தராத்திரியில்தீபங்கொண்டுவந்து தேடிப்பார்க்கும
ளவில் ஒருமூலையிலிந்தத்தட்டான் நித்திரைபோய்விட்டபோது அ
வன்முகத்திலிருந்தலட்சுமிகளைதீபத்தைப்போலே பிரகாசித்துகொ
ண்டிருந்தது அதைப்பார்த்தஅந்தமந்திரிமனைவி துக்கமடைந்து த
னது அந்தரங்கமுள்ளஒருதாதியையழைப்பித்து சிலபாதமங்கொ
ட்டைகள்தருவித்து அவன் போட்டிருந்த சட்டைக்குட்போட்டுப்
போய்விட்டா ளப்பால்உதயவேளையில் இந்தத்தட்டான்விழித்து சூ
ரியஉதயமானதைப்பார்த்துவீட்டுக்குவருமளவில் தன்சொக்காய்க்
குட்கிடந்தபாதமங்கொட்டையைப்பார்த்து மிகவுஞ்சஞ்சலித்துயோ
சித்ததில் ஒன்றுந்தெரியாமல்மிகவும்விசாரத்துடன்வீட்டுக்குவந்து
தன்ஸ்திரீயைநோக்கி நான் போட்டுக்கொண்டிருந்த சொக்காயில்
பாதங்கொட்டைவந்தவரலாறுதெரியாதநால் சொல்லவேண்டுமெ
ன்று ளதைக்கேட்டந்தஸ்திரீ மிகவுங்கடுஞ்சினங்கொண்டுஓபயித்தி
யக்காரபுருஷனே உன்னைப்போல்புத்தியில்லாதவனுக்கு மோகப்பி
ரமையேதுக்கென்று ளதைக்கேட்ட அவள்புருஷன் நீஎவ்விதமும்
பாதங்கொட்டைசங்கதிசொல்லவேணுமென்றுகேட்டா னதற்கவ
ள் நீராத்திரியிருந்தவிடத்திலவள்வந்திருந்தாள் அப்போதுநித்திரை
போய்விட்டதினாலே யிந்தப்பாதங்கொட்டைகளினால்குழந்தைகள்
விளையாடும்பாவனைபோல்விளையாடப்பட்ட உனக்குமோகப்பிரமை
என்னத்துக்கென் றுசொல்லுவதற்குச்சரியான சாடைகாட்டியிருக்கி
றாளென் றுச்சொன்னா ளதைக்கேட்டஅவள்புருஷன்நிசமாகவேநே
த்திராத்திரிநான்நித்திரைபோய்விட்டேனந்தமந்திரி பெண்சாதிவந்

துபோனதாய் எனக்குத்தெரியாதென்றுசொல்லிப் பெருமூச்செறிந்
துகிலேசப்படுவதை அவன்பெண்சாதிபார்த்து நல்லதுஇன்றிராத்
திரியும்போய்நித்திரைபோகாமலிருந்துபாருமென்று அதைகேட்ட
அந்ததட்டா னப்படியேபோய்காத்திருந்தா னன்றிராத்திரிநடுச்சா
மவேளையில்மந்திரிபெண்சாதியானவள் தந்திரமாகவந்து வாசற்பா
ராக்காரருக்குந்தெரியாமற்கதவைத்திறந்துவெளியில்வந்துதட்டா
னைகூட்டிக்கொண்டு சந்தடிசெய்யாமல் வீட்டுக்குள் போகும்போது
வாசற்கதவையடையாமற்பள்ளியறையிற்சென்று லாகிரிவஸ்துக்க
ளைச்சாப்பிட்டுமிகவுமானந்தத்துடன்புணர்ந்ததுமன்றி வெறியினால்சப்
ரமஞ்சத்திலிருவரும்அறிவுமயங்கிகிடந்தார்களப்போது அந்தப்பட்
டணத்தில்கொத்தவால்மந்திரிவீட்டுவழியாகநகரிசோதனைக்குவரு
ம்போது சன்டைமேற்போயிருக்கிறமந்திரிவீட்டுவாசற்கதவு திற
ந்திருப்பதைகண்டு பயந்துதிடுக்கிட்டு உள்ளேநுழைந்துஅவ்விருவ
ரும்படுத்திருந்தபள்ளியறையைபக்குவமாய்ப்பார்த்து அவர்களிருக்
கிறஅலங்கோலத்தைக்கண்டு சகிக்கமாட்டாமல் ஓமந்திரியின்மனை
வியே என்னேயிப்பேர்க்கொத்த கெட்டகாரியத்தைச் செய்தாயென்
று மிகவுங்கோபித்தபோது அவ்விரண்டுபேரும் அரண்டுபுரண்டு ச
ருண்டு பயந்தெழுந்தார்கள்.

அப்போது கொத்தவால்தட்டானைப் பின்கட்டாககட்டியதை
மந்திரிமனைவிபார்த்து மிகவுந்துக்கமுடையவளாய அவமானத்துக்
குட்பட்டவளாய் இரண்டாயிரம்பொன்மோராக்களையும்மூவாயிரம்
வெள்ளிநாணயங்களையும் அரிசிபருப்பு மோர் தங்கத்தாம்பாளத்தி
ல்நிறைத்துக் கொத்தவால்முன்புவைத்து மந்திமனைவிகைகட்டி வா
ய்புதைத்து வணங்கி இதைவாங்கிக்கொண்டுதட்டானைமுதுகில்கட்
டாமற் பலரும்பார்க்கவொட்டாமல் விட்டுவிடவேணுமென்றாள் இ
வள்புருஷனாகிய முதல்மந்திரிக்கும் கொத்தவாலுக்கும்அந்தரங்கத்
திற் கொஞ்சமிருந்தவிரோதத்தினாலே அவள்கொடுத்தபொருட் கு
டன்படாமல் மந்திரிமனைவி சகிதமாய் காவற்கூடத்துக்கனுப்பிவிட்
டான் பெண்சாதி சாதுரியங்களையறிந்த மந்திரிபெண்சாதிதனக்கு
ண்மையுள்ள ஒருதாதியைஅழைத்து அந்தசமாச்சாரத்தைதட்டாத்
தியறியும்படிசெய்தால் அவளிதற்குத்தகுந்தயோசனைசெய்வாளெ
ன்றெண்ணி அந்தத்தாதியிடத்தில் ஒருவெள்ளித்தாப்பாளக்கொடுத்
து தட்டான்வீட்டிலோசையிடும்படிபோட்டுவிடச்சொன்னாள் அந்
தத்தாதி அவ்விதமாகவேகொண்டுபோய்ப்போட்ட தாம்பாளசப்த
த்தினால் திடுக்கிட்டுவிழித்து வெள்ளித்தாம்பாளவோசையின்பிரகா
ரம் மந்திரிபெண்சாதியின் காரியமும் ஊரமெல்லாருக்குந்தெரியும்

ப்பதாலந்தக்கொத்தவால்முன்னால் ஒப்புக்கொண்ட தண்டனைபிர
காரம் மரணதிசையடையச்செய்து தட்டானையழைக்கச்செய்து உ
ன்பெண்சாதியுடனே நீவீட்டுக்குப்போவென்றனுப்பிவிட்டார் அர
சனும் சகலவிதமரியாதையும்பெற்றுவந்த தட்டானும்அவன்பெண்
சாதியும்மந்திரிமனைவியும் வீட்டுக்குவந்து அவன் கெட்டான் முட்
டாள்பையலென்றும் கொத்தவாலைநிந்தித்துச் சிநேகத்திற்றுரோகி
த்திருந்தாளாகையால் ஸ்திரீநம்பப்படலாகாதென்றும் ஸ்திரீகளு
டைய துர்நடத்தைகளும் பித்தலாட்டங்களும் இப்பேர்ப்பட்டதெ
ன்றும் அவர்கள்திணைவை எந்நாளும்விட்டுவிடவேணுமென்றும் நா
ன்காவதுமந்திரிசொல்ல அதைக்கேட்ட சகாந்தாருஷா நகைத்து
என்னளவில்அதிகப்பேச்சுகளைப்பேசுகிறீர் ஒன்றும்பேசவேண்டா
மென்று அவரையனுப்பிவிட்டு தான்முன்போலவே மோகப்பயித்
தியத்திற் சிறந்தவனாயிருந்தான்.



## ௫-வது-மந்திரிசொல் கதை.



கொஞ்சமேனு நெஞ்சந்தளராதிருக்குஞ் சாக்கன்றாகிய சகாந்
தாருஷாவிடத்தில் ஐந்தாவதுமந்திரி ஐந்தாநாளிரவில்சென்றுமிகவு
ம் வணக்கமாய்ச்சொல்லிய கதையாவது ஒருவூரில்மிகவும் சக்தியு
டையவனும் அழகிற்சிறந்தவனும் ஒருபால்யனிருந்தானவன்வி
வாகஞ்செய்துகொள்ளாமலும் பிறந்ததுமுதல் ஸ்திரீமுகம்பாரா
மலும் விரமச்சாரிவிரதத்தைசெலுத்திய அந்தவாலிபனுக்கு அவனு
டையஇஷ்டர்களெல்லோரும்ஒன்றாய்ச்சேர்ந்து எங்கள்பிரியமுள்
ளஇஷ்டனே உன்னுடையவாலிபமும் யவ்வனமும் வீணாய்ப்போவ
தாலும்விவாகமில்லாதிருப்பதாலும் உன்னைமங்களாகாரமாய்ப்பார்
க்கஎங்களுக்குச்சம்மதமாயிருக்கின்றதாதலால் சவுந்தரியமுள்ளஒ
ருபெண்ணைக்கலியாணஞ்செய்துகொள்ளவேண்டுமென்றார்கள் அ
தைக்கேட்டஅந்தபால்யன் அன்புடைய இஷ்டர்களே ஸ்திரீசாதிக
ளுக்குள்ளேயோக்கியமும் விசுவாசமும்வாஞ்சையுமில்லாமல் பொ
ய்யும்போகக்கருத்தும் புளுகும்துரோகமும் குடிகெடுக்குங்குணமு
ம் குடிகொண்டிருப்பதால் அவர்களுடன்சிநேகிப்பது பிராணச்சே
தமென்று எந்தத்தமிஷ்டர்கள்சொல்லியவண்ணம் எல்லோரும
ப்படியிருக்கமாட்டார்களென்றும் ஸ்திரீகளில் சிலர்கற்புடையஸ்தி
ரீகளாயிருப்பார்களென்றும் அவர்களால் வானமும்பூமியும்மானமு
ம்ஞானமும்நிலைத்திருக்குமென்றும் அவர்களுக்காகவே வெயிலுங்
காற்றுமழையும் இரவும்பகலும் உற்பத்தியாகி நடந்துவருவதென்

அயிருக்கிறபடியால் நீசொல்லியபிரகாரம் எல்லாஸ்திரீகளுங் கெ
ட்டவர்களென்று நாங்களெண்ணமாட்டோம்ஸ்திரீகளில்நேத்தியா
னநடக்கையுள்ளவர்களொருவன்விவாகஞ்செய்யவேணுமென்று அ
நேகங்கண்ட திஷ்டாந்தங்களை விஸ்தாரமாய்ச் சொன்னதின்பேரில்
அந்தபால்யன் இஷ்டானசமூகபாக்கியத்தாற்சம்மதித்தா னப்போ
தந்தஇஷ்டர்களெல்லாம் சந்தோஷத்துடன் அனேகருக்குப்பெண்
தேடி விவாகம்செய்வித்தவளாயுமெல்லாவீட்டுக்கும்போகத்தகுந்
தவளாயுமிருந்த ஒருஔவையாரையழைத்து மிகவும் அதிகமோக
மாகிய அழகுசொர்ணச்சாயல்போன்ற சரீரகாத்திரமும் நல்லகோ
த்திரமும்இளவயதும் அறிவிவேகமுள்ள ஒருபெண் எங்களுடைய
இஷ்டர்களில் ஒருவராகிய இந்தபால்யனுக்குவேண்டியிருப்பதால்
நீவிசாரித்துவந்து தெரியப்படுத்தவேணுமென்றார்கள்.

அதைக்கேட்ட ஔவையார் வெகுநாளளவுந்தேடி தகுமான
சவுந்தரியமுள்ளபெண்ணை திட்டப்படுத்தி அந்தசமாச்சாரத்தைபா
ல்யனுக்குத்தெரியப்படுத்தினாள் அந்தப்பால்யன்தன்னுடைய இஷ்
டர்கள்சகிதமாய் நல்லநட்சத்திரத்தில் வெகுமேன்மையுடன் விவா
கஞ்செய்துகொண்டா னந்தபால்யனுக்கும் ஒருமந்திரிகுமாரனுக்
கும்அன்னியோன்னிய நேசமாயிருந்தது அந்தஸ்திரீயோதன்னுடை
யபத்தாவைத்தவிர புருஷரூபமான சித்திரமெழுதினபடத்தைக்கூட
ப்பார்க்காமலிருந்தாள் இவ்விதமாய் சிலகாலஞ்சென்றபின்பு அந்த
ப்பால்யன் வியாபாரத்துக்காகயாத்திரைபோய்விட்டா னப்போது
மேகம்போலுங்கருத்தகூந்தலையுடைய அந்தஸ்திரீ தன்னுடையகண
வனைஞாபகப்படுத்திக்கொண்டு தன்வாசியில்வந்துநின்று ளந்தவே
ளையில் மந்திரிமகனாகியபால்யன் அவளிடத்திற்குவந்து அவளைப்பா
ர்த்துமோகங்கொண்டு தன்னைமறந்துதின்னைமேல்விழுந்து தேறி
யெழுந்து நாயகனைநாயகிக்கும் நாயகியைநாயகனுக்கும் கூட்டிவை
க்குந்தொழிலையுடையஒருதாய்க்கிழவியையழைத்து தன்னுடையஅ
ந்தரங்கத்தைச்சொல்லி அவள்விட்டினடையாளத்தையும்அவளடை
யாளத்தையுஞ்சொன்னா னப்போதந்த தாய்க்கிழவி முதிர்ந்தோடும்
விமானத்துப் பறந்தோடிஓட்டுப்போடுகிறசக்திதனக்குண்டென்று
ம் இவளைக்கூட்டிவைக்குந்தொழிலிலேபேசிப்பேசித்தன்னுடை
யதலைமயிர்வெளுத்துப்போய் கிழவியானதாலும் லட்சாதி லட்சம்
பொருளுடையஅந்தரங்கத்தைநிறைவேற்றிகொடுத்ததாயு மனேக
ங்கோடிபெண்களுடையகற்பைக்கருவை கெடுத்ததாலுங்கடவுளா
னவர் தன்னையிதற்காகவேலோகத்திற் சிருஷ்டித்ததாயும் ஒருக்கா

இம்சுந்தப்பெண்கன்னிவிட்டுதப்பியப்புறம்போகாதென்றும் புற
ம்பேசி கொடியசண்டாளியாகியதாய்க்கிழவி அந்தசிறுவன்சொன்
னகுறிப்பு அடையாளப்படி அவள்வீட்டைப்பார்த்துக்கொண்டுசில
புஷ்பங்களின் ஆரங்களும் கோத்தமாலைகளுங்கொண்டு பூவாணிச்
சிவேடம்பூண்டு அவள்வீட்டுக்குப்போய் எந்தநாளும்பூவிற்றுகொ
ண்டிருப்பதுபோல அந்தப்பால்யனுடையமனைவி மனதின்பிரகாரம்ந
டந்து அவளந்தரங்கத்துக்குப்பாத்திரமுள்ளவளாகி ஒருநாளந்தப்
பாலியப்பெண்ணாள் சந்தோஷமற்றிருப்பதைக்கண்டென்னராசா
ணியே நீயெக்காலமுந்துக்கமாயிருக்கிறாய் ஒருநாளாவது சந்தோ
ஷமாயிருக்க நான்பார்க்கவில்லையே இப்போதுனக்கிருக்கிற எவ்
வனகாலத்தில் மிகவுஞ்சிந்தைகளித்திருக்கவேணுமே அப்படிக்கில்
லாமல் முக்கியதுக்கமாயிருப்பதின்காரணத்தைச் சொல்லவேண்டு
மென்றுகேட்டதுமல்லாமல் நீசிக்கறுத்துசிவிமுடித்து ஆடையாபர
ணாலங்காரியாகி மயங்காதசந்தோஷசிங்காரநாயகியாயிருப்பதை
க்காட்டவேணுமென்று கிழக்காளிகேட்டாளதற்கந்த பால்யஸ்திரீ
ஓகிழவியே என்னுடையநாயகன் காசுபணந்தேடயாத்திரைபோனது
முதல் தனித்திருக்கும்பிரிவாற்றாமையால்வருந்தி துயரில்பொருந்
தியிருக்கிறேனென்றாள் அதற்கந்தக்கிழவி நீயிவ்விடத்திற் படுகிற
கஷ்டநிஷ்டூரம் உன்னுடையபத்தாவுக்குத்தெரியுமோ அம்மா புரு
ஷாளுடைமனம் மெத்தவுமிரக்கமற்றதாச்சுதே ஐயோ உன்னுடை
யநாயகன் ஒவ்வொருஸ்திரியிடத்திற்படுக்கையாகஆநந்தத்திலிருப்
பானே மருவுவானே அவன்றேகமறுமாதரணைவார்களே அதைய
றியாமல்அவனைநினைந்துவருந்தி நிகஷ்டப்பட்டு உடம்பைக் கெடுத்
துக்கொள்வானேன் அப்படிக்கில்லாமலும்பருவகாலத்தைத்தளரவி
டாமலும் எவ்வனத்தன்மைமெலிதாகாமலும் அநுபவிப்பதற்கு இப்
பட்டணத்தில் வெகுஅழகுள்ளஒருபால்யனிருக்கிறானவனை நீகண்
டால் மோகித்து பிரமைப்படுவாய் அவனுடன்புணர்ந்தால்மிகவுஞ்
சந்தோஷமடைவாயென்றாள் அதைக்கேட்ட அந்தஸ்திரியானவள்
ஒன்றுஞ்சொல்லாமல் சும்மாயிருந்துவிட்டாள் அப்பாலந்த தாய்க்
கிழவி தன்வீட்டுக்குப்போனதின்பிறகு அந்தஸ்திரீநாயகிதாய்க்கிழ
விசொன்னபேச்சுகளைக்கொஞ்சம் அங்கீகரித்து கருத்தில் கல்மிச
ம்வரும்படி செய்துக்கொண்டாள்.

மறுநாட்சாயந்திரம் பூக்கொண்டுவரும் அந்தத்தாய்க்கிழவிமு
ன்னாட்சொன்னசரித்திரங்களைப்போய்ச்சொல்லிஅவள்சம்மதிக்கும்
படிசெய்து முன்னடிபாத்தா லவனைக்கூட்டிக்கொண்டுவந் துறவை
முட்டி இருவருமுவச்சேர்த்துவிட்டாள்அவ்விரண்டுபேரும் பலவி
தசல்லாபக் கிரீடைகளால்புணர்ந்துஆனந்தமநுபவித்தார்களது மு

தந்திசாரநாயகனை மதிமுகமோகனாயகியும் உடலுமுயிரொன்றாய்
இரவும்பகலும் பிரியாமலனேகமும் மகிழும்படிக்கூடியிருந்தார்கள்
இப்படியாய்ச்சிலகாலஞ்சென்றபின்பு யாத்திரைபோயிருந்த சொர்
ணப்புருஷன் வீடுவந்துசேர்ந்தான் அவனைப்பார்த்தபத்தினியானவ
ள் யாத்திரைபோயிருந்தபுருஷன் வந்தானென்று சந்தோஷமில்
லாமல் துக்கப்பாவியென்னவந்தான் அந்தவூரிற்சாதலாகாதாகாட்டுத்
தோல்வேதலாயாசதேபோவென்றும் இனிமேல்தனக்குரியபிரிய
முள்ள சோரநாயகனுடனின்குதற்கிடமில்லையேயென்றுந்துக்கப்
படும்போது அவள்புருஷன் ஓனாராத்தனமுள்ளஸ்திரீயே நீதுக்
கமாயிருக்கிறபடியம் இன்னதென்றெனக்குச் சொல்லவேண்டுமெ
ன்றான் அதற்கவள்தனக்குச் சரீரவாரோக்கியமில்லாததால் துக்க
மாயிருக்கிறேனென்று சாக்குப்போக்குச்சொல்லி யிரவும்பகலும்
புருஷனிடத்திற்போகாமல் வேறேயிருந்து தன்னுடன்பழகியதாதி
யையழைத்து நான்சொல்லப்போகிறசங்கதியை உன்னிருதயத்தில்
வைத்துப் பரமரகசியமாய்முடிக்கவேண்டுமென்று கெஞ்சிச் சொ
ன்னாள் அப்படியேகல்லதும்மாவென்று அவள் கருத்துக்கிசைய
ச்சம்மதித்தபோது எஜமான்சொல்லியதாவது என்னுயகன் யாத்தி
ரைபோய்வந்ததிற்பாடு அவனுடன்கூட மனமில்லாதவளாய் தேக
ஜாட்டியமென்று வேடங்கொண்டு தனியறையிலிருக்கிறேன் எத்த
னைநாளைக்கிப்படியிருப்பதென்று ஒருதந்திரஞ்செய்யப்போகிறேன்
நீஅதற்குடன்பட்டு எனக்குப்பிற்காலத்திலு மென்னிதப்படி ந
டப்பையாகிலுன்னை பென்றும்மறவேன் அதாவது மூச்சைப்பிடி
த்துக்கொண்டு இறந்தவள்போல ஜாலஞ்செய்துவிடுகிறேன் அப்
போது நீயென்னைவெருசிக்கிரத்திற்குளிப்பாட்டி என்பிரேதத்தை
வஸ்திரத்தினால்மறைத்து குழியில்வைத்துமூடிப்போட்டு என்பொ
ய்மரணத்தை மெய்மரணமாக்கிவிடாமலும் காலதாமஷஞ்செய்யா
மலும் என்னைத்தொட்டிக்கட்டி மூட்டிக்கொண் டெவருமறியாமலு
ய் என்கிட்டேயேயிருந்து சமாதிக்குழிக்குள்ளாகி எனக்காகவந்
தவர்களும் நீங்கிப்போய்விட்டபிற்பாடு தோண்டி யெடுத்துக்கொ
ள்ளும்படி சோரநாயகனிடத்திற்சொல்லவேண்டுமென்றுசொன்ன
தந்திர மேற்கூறியபிரகாரம் மெய்போலநடப்பிக்கவேணுமென்
றாள் அதற்கத்தாதிசம்மதித்து அப்போதே அவள் புத்திவிசாலத்
தைக்குறித்தும் யோசனையைக்குறித்தும் தோத்தரித்தாள்.

அதற்குமறுநாள் அந்தவாலிபஸ்திரீ உண்மையானவியாதியை
ப்போலவேகுமாயாசத்துடன் தன்பத்தாவையழைப்பித்து ஆ என்
பிரியமுள்ளநாயகனே நானிந்த வியாதியால் மரணமடைந்து போ

பிழைக்கமாட்டேனென்றுமிகவும்அவர்நம்பிக்கையான வார்த்தை
களைச்சொல்லியபோதில் அதைகேட்டுஅவள்கணவன்வயித்தியர்க
ளையும்மந்திரவாதிகளையும் வரவழைத்துவேண்டியபிரயத்தினங்கள்
செய்தும் உபசரித்தும்உபத்திரவமதிகமாய்ச்சவுக்கியமாகாதுபோல்
ஜாலம்பண்ணி தாதியையழைப்பித்து மேற்சொல்லியபிரகாரம்பரு
படியும்புத்திசொல்லி மரணமடைந்தவளைப்போல் மூச்சையடக்கிக்
கொண்டாள் அதைபார்த்துஅவள்புருஷனும்மற்றவர்களுமிவளிறந்
துபோனாளென்று நிச்சயித்து மிகவுமழுது துக்கப்பட்டுமாரடித்துக்
கொண்டு அவள்கேட்டநிர்யாணப்பேச்சின்படி அவளுக்குரியபிரகா
ரம்அந்ததாதியினாற்றானே ஸ்நானஞ்செய்வித்து வஸ்திராலங்கிர்தங்
களுடன்கொண்டுபோய்ச்சமாதியில்வைத்துஎல்லோரு மண்ணைவா
ரிப்போட்டுவிட்டுக்குவந்துவிட்டார்கள்.

அப்பாலந்தச்சோரநாயகன்உடனேவந்து மண்ணைத்தோண்டி
யெடுத்துபாதொருத்தருக்குந்தெரியாமல் வெகுதூரத்திலிருக்
கும்ஒருஊரில்கொண்டுபோய் வைத்துக்கொண்டு மிகவும்ஆனந்தத்
துடன்கொஞ்சநேரமாவது துக்கமாயிராமல் சந்தோஷமாயிருக்கு
மளவில் மிகவும்நிற்பாக்கியமுள்ளசொந்தப்புருஷன் தன்னுடையஸ்
திரீயின்சுவாசங்களை ஞாபகஞ்செய்து அழுகிறகாலத்தினுடன்மூழ்
கிதன்ஸ்திரீயின்கோரியைத்தூக்கிக்கொண்டு போகும்படியாய்க்கத
றியழுதுசமாதியைக்காத்திருக்குஞ்சந்நியாசியைப்போல்அவள்கோ
ரியைத்தூக்கிக்கொண்டிருந்ததுந்தவிர அன்னஆகாரமுதலியயாவை
யும்வெறுத்து மிகவும்கஷ்டத்திசையிலிருந்தான் அக்காலத்திலந்த
வூரிலிருந்து யிந்தத்தூர்நடத்தைநடந்த அந்தஸ்திரீயைக் குழந்தை
முதலெல்லோருமறியத்தக்கதாயுமிருந்தது அவள்மரணமடைந்தஸ்
திதியைத்தெரிந்தவளாயுள்ளஒருவளைபல்விற்கப்பட்ட பெண்மகளா
னவள்இத்தியாதிகெட்டசெய்கையுள்ளஸ்திரீயும் சோரநாயகனுமிரு
ந்தவூருக்குவளையல்விற்கப்போனவிடத்தில் இவளைவளையற்போட
வழைத்தபோதுஇந்தசோரநாயகியைகண்டு ஆச்சரியங்கொண்டுஇ
றந்துபோய்குழியிலடக்கம்பண்ணப்பட்டஇவளிங்கேஎப்படிவந்தா
ளென்றேங்கி அவளோஇவளோவென்று சந்தேகமுடையவ
ளாய்மறுபடியும் தனதுபுத்திவிசாலத்தினாலுஞ் சிலயுக்திகுறிப்பினா
லும்அவள்தானிவளென்று நிச்சயித்தவுடனே தன்னூருக்குவந்து
அந்தச்சோரஸ்திரீயின்மணவாளனைக்கண்டு ஓகோபாவித்தியக்காரம
னிதனேஉன்னுடையபெண்சாதி செத்துப்போய் உத்தருமைக்கட
ன்களைமுடித்து மெத்தவருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறாயே அவள்

இதற்கடுத்தமூன்றுகாதவழியுள்ளபாஜிராவென்னும்நகரத்தில் தனதுமனதுக்குரியபிரிய சோரநாயகனுடன்பிரமானந்தமடைந்திருக்கின்றவளானவளைக்கண்டு அவளுக்குவளையலுமணிந்துவந்தேனென்றுரைத்தாள் அந்தமொழிகேட்டசோரநாயகன் வளையற்காரியைநோக்கிஅடியம்மா உனக்கென்னபிரமையா என் பெண்சாதியிறந்தெத்தனைகாலமாச்சுது இன்னம்சமாதியினிடத்திற் போயழுதுக்கொண்டிருக்கின்றேனே இப்படியிருக்க இப்பவந்துநட்டுக்கொண்டிருக்கிறாளென்றுசொல்கிறாயே செத்தவள்பிழைப்பாளா அவள் மகாநற்குணவதிவிற்பனவிநீதி பொற்பினிற்சிறந்தவள் சொர்க்கலோகமடைந்திருப்பாளேயென்றான் அதற்கவள்விக்கித்துக்கமுடையவளாய்ஐயையோநீரென்னசுத்தசாக்தஸ்தமாயிருக்கிறீர்நீரிப்போதென்னுடன்கூடவருவீராகில் அவளையுமவனையுநான் உனக்குக்காண்பிக்கிறேனென்றாள் அதற்கப்படியே வருகிறேனென்றுடன்பட்டு அந்தவளையற்காரியுடனேகூடி இளையாமற்பிரயாணப்பட்டுமேற்ட்றியபாஜிராவென்னும்நகரத்திற்குவந்து அந்தப்பெண்சாதியிருந்தவீட்டுக்குப்போய் அவளைநேரிற்பார்த்து ஆ அடியென்னன்புள்ளவண்ணேமணி முன்னமேயிறந்துவிட்டாயே இன்னகரிலெப்படிவந்தாயென்று அக்கன்னியைக்கட்டித்தழுவபோனான் மோசக்காரிபதைபதைத்துதுடிதுடித்து ஆரோ ஒருவன் என்வீட்டேறிவந்து என்னைக்கட்டியணைக்கக்கைநீட்டினனென்றலறைக்கட்டிகூச்சலிட்டுப்பேச்சுமூச்சில்லாமலோடிவந்து விழ்ந்தாள்.

அந்தக்கொடூரத்தைக்கண்ட அக்கம்பக்கத்துவீட்டுக்காரர்முதலியபேருமோடிவந்து அவனைப்பிடித்தடித்துக்கட்டும்படிஎத்தனித்தபோது அவர்களைநோக்கி ஆ-ஆ உத்தமர்களேஎன்னைக்குற்றமில்லாமற்கட்டுவது ஆண்டவனுக்கடாது என் னுத்தாரங்கேளுங்களென்றான் அதென்னவென்றுவிசாரிக்குமிடத்தில் ஆதியோடந்தமாய்நடந்தசங்கதிகளியாவுஞ்சொன்னான் அதைக்கேட்டயாவரும்அவளையுமவனையும்அவ்வூரதிகாரியினிடத்திற்கொண்டுபோய விட்டார்கள்அன்னியாயாதிபதியாவத்தையும்பரிஷ்காரமாய்பாட்சாதனத்துடன்விசாரித்து ஸ்திரீசாதிகளுடையமோசங்களெல்லாந்தெரிந்து இவளுக்காசைநாயகனாகிய யிவனுடன் இவளையுங்கொடியதண்டனைக்குள்ளாக்கினான் அப்பாலந்தஸ்திரீக்குரியபழையபுருஷன் வெகுமானியாதலாலே இந்தஅவமானத்தைச்சகிக்கமாட்டாமல் ஆண்டியாய்ப்பிரபஞ்சவாழ்க்கையைத் துறந்துபெண்ணெனும்பேரைமறந்து உண்மைக்கவுளின் தொழுகையிற்சிறந்து காலங்கழித்திருந்தான் ஆகையால்ஸ்திரீகளைஎப்போதும் நம்பலாகாதென்று ஐந்தாவதுமந்திரி சொல்லியகதையை சஹாந்தாஷாவென்பவர்கேட்டு ஓமந்திரிமார்களே உலகத்திலொருத்திகெட்டவளா யிருந்தால்பலருமப்படி

யென்றுநினைக்கக்கூடுமோ ஆகையால்உங்களுடையவார்த்தையில்ம
யங்கிநான்திரும்புவேனென்றெண்ணுதீர்கள் நான் கொண்டகாமப்
பொக்கிஷமிக்காலத்தில் செலவழியாதென்றோங்கிகூவித்தனியகத்
திற்றோன்றியதோற்றத்தைபோலாத்மமில்லாமற்பார்த்துக்கொண்
டிருந்தான்.

௯-வது-மந்திரிசொல்கதை.



ஒருநாளிரவில் ஒருவதுமந்திரிவந்து தேறுக்காமக்கனலால்
வெதும்புகிறசஹாந்தாருஷாவென்னும் பிரபுவைவணங்கிஎங்களுக்
கிறையாகியவந்தவேலசேளுமென்றொருகதைசொல்லத்தொடங்கினு
ன் பூர்வத்தில் சமாசானமென்னும் பட்டணத்தில் திரவியசம்பன்ன
னாகியஒரிராசனிருந்து துரைத்தனநடத்திவருகான் அந்தராசனுக்கு
தெய்வலோகரம்பையைபோலும் இரதிதேவியைப்போலும் அழகுக்க
டைக்கலஸ்தானம்போலும், அலங்காரமுள்ளஒரு ஸ்திரீயிருந்தாள்
அவளோதன்னுயகனைத்தெய்வயபோல்நோக்கிக்கற்புடைமையிற்சி
றந்ததொப்புவமையில்லாதிருந்தவளாயிருந்தாள் அந்தஸ்திரீயான
வள்தானும்தன்புருஷனும் அம்சதூளிகாமஞ்சத்தின்பேரில் நித்
திரைசெய்யுங்காலையில் அரண்மனையின்சுந்துமதிற்சுவரைத்தாண்டி
ஒருபூனையானது ஓடிவந்து ராசனும்ராசஸ்திரீயும்படுத்திருக்கும்பா
யின்மேல் புரண்டுதிரண்டுவிரண்டு முலையினையுடையஒருபெண்ணுரு
க்கொண்டுநின்று அந்தராசஸ்திரீயைமெதுவாயெழுப்பி ஓ அம்மா
நீமரோசானகரத்தையாளும் பூபதியின்பெண்சாதியாகிய உன்தமக்
கையின்பெண்ணுக்குஇன்றிராத்திரிமுகூர்த்தநேமித்துநடக்கப்போ
கின்றதாகையால்உன்னையும்உன்றங்கையாகியமந்திரிபெண்சாதியை
யும் அழைத்துக்கொண்டுவரும்படிக்கு என்னையனுப்பிவைத்ததும
ல்லாமல் நீங்கள்கலியாணம்கண்ணிக்கொள்ளுவதற்கு முன்னுகக்க
ன்னிகைப்பருவத்தி லிச்சைவைத்திருந்த கணவனிருவரையுந்தருவி
த்துவைத்திருப்பதாய்ச்சொல்லசொன்னுள் உனறயக்கையென்று
பூனைப்பெண்பேச அதைக்கேட்டுச்சந்தோஷித்துராஜபத்தினியான
வள் மந்திரிபெண்சாதியாகியதன்தங்கையை அழைத்துவரும்படியா
ய் அந்தபூனைபெண்ணையனுப்பிவிட்டுதான் பிரயாணப்படுவதற்குவே
ண்டிய ஆடையாபரணங்களையலங்காரம்பண்ணிக்கொண்டிருந்தாள்
அந்தபூனைப்பெண்ணுனவள் பழயவடிவமாகிபூனையுருவெடுத்துமதி

புறம்தாண்டிப்போம்போதுசித்திரைபுரிந்தஇராசன்விழித்துக்கொண்டுதூக்கந்தெளியாதுறங்குவர்போலிருந்துஇந்தப்பூனைவரும்படியாயிடங்கொடுத்த நமது கோட்டைமதிலானது சத்துருக்களையுங்கொண்டுவந்து விட்டுவிடுமேயென்றுசந்தேகங்கொண்டுகோட்டைபைப்பந்தோபஸ்துசெய்யவேண்டிய காரியங்களை யோசித்துக்கொண்டிருந்தான் அப்படியிருக்கிறசமயத்தில் இங்கிருந்துபோனபூனையும்அங்கிருந்துவெருத்துவந்த மந்திரிபெண்சாதியாகியபூனையும் ஆக இரண்டுபூனைகளும்வந்து படுக்கையின்மேற்புரண்டுதிவ்வியதேகம்பெண்ணுருவெடுத்து,இவ்விடத்திலிருந்த ராஜஸ்திரீயுடன்பேசியிரயாணசூசபமுடித்துக்கொண்டு மூவரும்பூனையுருவெடுத்துப்போய்விட்டார்கள்.

அப்போதந்தராசாவும்மிகுந்த ஆச்சரியத்துடன்அவர்கள்பின்தொடர்ந்துஒளித்துஒளித்துப் பூனைகளுக்குத் தெரியாமற்போனபோதுஅப்பட்டணத்திற்குவெளியில் ஒருகுளக்கரையோரத்திலிருந்தபெரியமரத்தைக்கண்டு பூனைப்பெண்களாகிய அம்மூன்றுபேரும்அம்மரத்திமேலேறிக்கொண்டார்கள் அந்தராசாவும் அம்மரத்தினோர், மூலையில்தொற்றியேறிஉட்கார்ந்துக்கொண்டான் அப்போதந்தமரம்அந்தபூனைகள்செபித்தமந்திரத்தால் ஆகாசத்திறபறக்கவாரம்பித்துஅனேகநாட்பயணமுள்ள ஒருபட்டணத்தின் அகிழோரத்தில்வந்துநின்றதுஅப்போதந்தபூனைகள் மூன்றுமிறங்குகிறஜாடையைஇராசன்பார்த்துத்தான் வெகுவிரைவிலிறங்கி ஒருமறைவிலொளித்துக்கொண்டான்அப்பூனைகளுமரத்தைவிட்டிறங்கி அப்பட்டணத்திற்குள்ளேசென்றுஒருகலியாணவீட்டுக்குள் நுழைந்தார்கள் அவர்களுடனிந்த இராசாவும்அவ்வீட்டுக்குட்சென்றொளித்திருந்தார்உள்ளேபோனமந்திரிபெண்சாதியையும்தன்பெண்சாதியையுமவ்வூரிராசன்பெண்சாதியாகிய தமக்கையார் மிகவும்மரியாதையுடனழைத்துததகுமான உபசாரஞ்செய்ததுமன்றி அம்மூன்றுபேருஞ்சாராயவகைகள்குடித்துமிகவுமானந்தத்துடன் அவர்களுக்கிஷ்டமானபுருஷர்களோடு புணர்ச்சிசெய்ததுமல்லாமல்தங்கைமார்களோடுதானுமுல்லாசமாய் கொஞ்சிக்கொண்டிருந்தாள் இதுகளையெல்லாம் அந்தராசாவானவர் கலியாணப்பிள்ளையின்பக்கத்தி லொளித்துப்பார்த்துக்கொண்டிருந்தார் அந்தக்கலியாணத்தின்மாப்பிள்ளை மிகவும்குரூபியாய் இருந்ததினாலேயும் அக்கலியாணச்சபையில் வந்திருந்தசகலரும்மாப்பிள்ளையையும் பெண்ணையும் மணவறையில்வைத்துச்சடங்குநடப்பிக்கும்போது தெய்வலோகத்தரம்பைக்குச்சமானமானஇப்பெண்ணுக்குக் குரூபியாயுள்ளகாப்பிரிகளைப்போலொத்த மாப்பிள்ளையைவைத்துக்கலியாணஞ்செய்வது சரியல்லவென்று அந்தமாப்

பிள்ளைக்குபதிலாக அந்தசபையிலிருக்கிற அழகுள்ளபுருஷனைபெண்
ணுடனேவைத்துசடங்குசெய்வதுமிகவும்நல்லதென்று ஒருமொழி
யாகச்சொன்னதை அந்தப்பெண்ணினுடைய தாயுந்தகப்பனும்ஒப்
புக்கொண்டு அப்படியே அச்சபையைச்சூழ்ந்துபார்க்குமளவில இ
ந்தராசனைத்தவிர வேறொருவரும் அதிக அழகுள்ளவர்களில்லாமலி
ருந்ததால் அந்தராஜாவை ஆபரணங்களாலலங்கரித்துமணவறையிற்
பெண்ணுடனே வைத்துசடங்குசெய்யுமளவில் அவனுடையராஜஸ்
திரீகண்டு தன்தமக்கையாரையழைத்து ஒனதுபிரியமுள்ளதமக்
கையேகாணிப்புருஷனைப்பார்த்தால்இப்போதான்மாப்பிள்ளைக்கோ
லமிட்டிருக்கிற என்புருஷனைப்போலவே யிருக்கிறானென்றும்அல்
லது அவனேதான் வந்துவிட்டானோவென்றும் எங்கள்பட்டணம்வெ
குதூரமிருக்கிறபடியால் இவ்விடத்துக்குஎவ்விதமாகவருவானென்
றும்அவனைப்போலயிருக்கிற வேறொருவனோவென்றுநினைத்துவி
ட்டுக்குப்போய்விட்டார்கள் அப்போகலியாணச்சடங்குமுடிந்தபிற்
பாடு அந்தராஜனுக்கு அணிந்திருந்த ஆபரணச்சகிதமாய் மணவாள
கோலத்துடன் பெண்ணையும்பிள்ளையையும் மந்திரிபெண்சாதியுடன்
பள்ளியறைக்கனுப்பிவைத்தார்கள்,

பின்புபொழுதுவிடியஒருஜாமமிருக்கும்போது மந்திரிபெண்சா
தியும் ராசன்பெண்சாதியும் பூனைவேடங்கொண்டுவெளியில்வந்தார்
களதைப்பார்த்துகலியாணப்பிள்ளையான அரசன் அவர்கள்பின்தொ
டர்ந்து முன்பறந்துவந்தமரத்தின்பேரில்பூனைகள்வந்தேறியபோது
இந்தராசாவும் அம்மரத்தின்கிளையிலேறி வெகுதூரந்தொலைவிலுட
கார்ந்தபிறகு முன்போலவே அந்தமரம்பறக்கவாரம்பித்துப்பழைய
பட்டணத்தில்வந்திறங்கிப்பூமியில்நின்றது அப்போதந்தராஜன்வெ
குவிரைவிலிருந்து அரண்மனைக்குட்சென்று ஆடையாபரணங்களை அ
விழ்த்தெறிந்துபோட்டுபுசத்திற்கட்டியிருந்த பாசிபந்தையவிழ்க்க
மறந்துபோய்சப்பரமஞ்சத்தின்பேரில் நித்திரைபோய்விட்டான் அத
ன்பிறகு அவ்விரண்டுபூனைகளில்ஒருபூனை இராசனரண்மனைக்குப் ஒரு
பூனைமந்திரியரண்மனைக்கும்போய் அவரவர்புருஷர்பக்கத்தில்பெண்
ணங்கமெடுத்துதூங்கிவிட்டார்கள் பொழுதுவிடிந்தவுடனெழுந்து
அந்தராஜனும் இராசஸ்திரீயும்சிரித்துவிளையாடி இராசன்தந்தசுத்தி
செய்யுமளவில் அவன்புஜத்திற்கட்டியிருந்த நூதனமானபாசிபந்தை
க்கண்டு அந்தராஜஸ்திரீபயந்து திடுக்கிட்டுஓராசாவே உம்முடைய
புஜத்திற்கட்டியிருக்கிற பாசிபந்தேதென்றும் நேற்றிராத்திரிநா
ன்போயிருந்த விடத்திற்கு நீரும்வந்திருந்து மாப்பிள்ளைக்கோலங்
கொண்டிருந்தீரோவென்றும் என்னுடையஅந்தரங்கமெல்லாம்உமக்
குத்தெரிந்துபோச்சுதென்றும் பேசிக்கொண்டிருக்குமளவில் ஒரு
சின்னக்கல்லையெடுத்துசிலமந்திரங்களைசெபித்துஇராஜாவின்பேரில்
போட்டாள்உடனே அந்தராஜன்மயில்வேஷங்கொண்டு மயில்களா

வெகுபோல ஆடவாரம்பித்தான் அப்போதந்த ராஜஸ்திரீ அம்மயி
லைப்பிடித்து ஒருகூண்டிலடைத்துக்கொண்டாள்.

அதுமுதல்ராசன் அரண்மனையைவிட்டுவெளியில்வாராமலும் சி
ம்மாதனத்தின்மேலில் உட்கார்ந்து இராச்சியபரிபாலனஞ் செய்யா
மையினாலும்மந்திரிமிகவும் விசாரப்பட்டு இராசனுக்குச் சொல்லிய
னுப்பியதாவதுசுவாமியவர்கள்சிவர்மூலத்தின் விசாரணைபரிபாலன
ஞ்செய்யாமல் அரண்மனைக்குள்ளிருப்பதுசோரய்த் தோன்றவில்லை
யென்றுசொல்லியனுப்பினான் அச்சமாச்சாரம் சொல்லப்போனவ
னிடத்தில் அரண்மனையிலுள்ளசொந்தவேலைக்காரிகள் மிகவுந்துக்
கத்துடனே இராசனிருக்கிறஸ்திதியைச்சொல்லியனுப்பினார்கள் அ
தைக்கேட்டமந்திரிகள் எல்லோரும் உத்தியோகஸ்தர்களும் மனம்
நொந்துவிசாரமுந்துக்கமுமடைந்தார்கள் அதில்பெரியமந்திரி இரா
சாவுக்குநேரிட்டிருக்கிற அசவுக்கியவிபத்தின் உபத்திரவத்துக்குத்
தகுந்த அவிழ்கந்தேடவேணுமென்றுமிகவும்விசாரத்துடன்சாப்பி
டாமலும்ஸ்திரீயிடத்திற்பேசாமலும்சும்மாயிருப்பதைக்கண்ட மந்
திரியின்ஸ்திரீயானவள் மிகவும்மந்திரந்தெரிந்தவளாயும் சூனியஞ்
செய்பவளாயும் அதைத்திருப்பவமிந்தவளாயுமிருந்தாள்,

அவள்தன்பத்தாவைநோக்கி ஒளன்கணவனேநீர்விசனமாயிரு
க்கிறவிபரமென்னஎனக்குச்சொல்லவேணுமென்றாள் அதைக்கேட்
டஅந்தமந்திரிஉன்னிடத்திற்சொல்வதினால் யாதொரு பிரயோசன
முமில்லையே என்னுடையமனச்சஞ்சலம் கர்ப்புடையஸ்திரீகள்கரு
ணையினால்நிவர்த்திசெய்விப்பார்களென்றான் அதைக்கேட்டஅந்தஸ்
திரீயானவள்கற்புடைய ஸ்திரீகளென்றும் நான்நிவர்த்திசெய்யவல்
லவளென்றும் அதன்விபரந்தெரியச்சொன்னால்நானதைச்செம்மை
யாய்ச்செய்விக்கிறேனென்றுஞ்சொன்னாள் அதைமந்திரிகேட்டுநம்
முடையஇராசாவையாரோ சூனியத்தினால் மயிலாக்கிப்போட்டார்
கள்அவரைபழையபடி இராசாவாகவேணுமென்றான் அப்போத
ந்தஸ்திரீ அம்மயிலைஎன்னிடத்திற் கொண்டுவந்தால் நான்மந்திரத்தி
னால் அந்தச்சூனியவுருவத்தைமாற்றிவைக்கிறேனென்றாள் அதை
யந்தமந்திரிகேட்டு வேட்டைக்காரர்களில்கெட்டிக்காரனுள்ள ஒ
ருவனையழைத்து காட்டிலிருக்கிறமயில்களில் நாலைந்துமயிலைக்கொ
ண்டுவரும்படிசெய்து அதில்அலங்காரமுள்ளஒருமயிலைத்தெரிந்தெ
டுத்து கூண்டிலடைத்து அந்தமயிலிராசாவின் அரண்மனைக்குக்கொ
ண்டுபோய்ராசாவினரண்மனையில்வேலைசெய்யும் வெள்ளாட்டிகளில்
ஒருத்தியையழைத்து இராஜஸ்திரீயினிடத்திற் சொல்லியனுப்பின
தாவதுஎங்களுடையமாதாவே நீர்ஒருமயில் வளர்க்கிறதாகக்கேள்
விப்பட்டேன் அடியேனும்ஒருமயில்வளர்ப்பதால்தாங்கள்தயவுசெ

ய்து அரண்மனையிலிருக்கிறமயிலை யனுப்பிவைத்தாலென்னிடத்திலி ருக்கிறமயிலையும் அரண்மனைமயிலையுஞ்சேரப்பார்த்து அனுப்பிவிடு கிறேனென்று சொல்லியனுப்பியதை அவ்வெள்ளாட்டிப்போய்இரா ஜஸ்திரீயினிடத்தில் தெரியப்படுத்தினதால் அப்படியேஇராஜஸ்திரீ யானவள்மயிலையனுப்பிவைத்தாள் அந்தஅரண்மனைமயிலை ஒருகை யிலும் தன்மயிலைஒருகையிலும் வைத்துப்பெரியமந்திரிபார்த்து அ ரண்மனைமயிலை தன்னுடையகூண்டிலும் தன்னுடையமயிலை அரண்ம னைகூண்டிலும் அடைத்து அரண்மனைமயிலைதன்வீட்டுக்குக்கொண்டு வந்துதன்ஸ்திரீயினிடத்தில் ஒப்பிவைத்தான அதையவள்கண்டு இ ராஜஸ்திரீயினுடைய மயிலென்றறிந்துதன்தமக்கைசெய்த சூனியத் தைஎப்படி நிவர்த்திசெய்விக்கிறதென்று யோசித்துநாம் நிவர்த்தி செய்யாவிட்டால் தன்புருஷன்தன்னைவிபசாரஸ்திரீயென்று நினைப் பானைஆகலாலவன்எவ்வாறுநினையாதிருக்கும்படி சூனியமந்திரத் தைநிவர்த்திசெய்யவேண்டுமென்று அவிடத்திலிருந்த சிலகோது ம்பைகளையெடுத்து மந்திரித்து அம்மயிலின்மேறிற்போட்டாளுட னே அந்தமயிலுருவொழிந்து முன்போலவேஇராசாவாகிப்போனா னுடனேமந்திரிவாளாயுதத்தையுருவி எதிர்நின்றதன் பெண்சாதி யைவெட்டிப்போட்டான்,

அதைஅந்தராசன்கண்டு நான்என்வீட்டைவிட்டு உன்வீட்டுக் குவந்தவிபரத்தையும் நீஉன்பெண்சாதியைவெட்டிப்போட்டவிபர த்தையும் எனக்குச்சொல்லவேண்டுமென்றான் அதற்கந்தமந்திரித டந்தசரித்திரமெல்லாஞ்சொல்லி தன்னுடையபெண்சாதியுஞ்சூனிய ந்தெரிந்தவளாயிருப்பதினாலே ஒருவேளைதன்னையும் அபாயஞ்செ ய்வாளென்று நினைத்து அவளைவெட்டிப்போட்டேனென்றான் அதை க்கேட்டஅந்தராசன்தன்னுடைய அரண்மனையிற்சென்று தன்னைம யிலாகச்செய்த பெண்சாதியையும் வெட்டிப்போட்டுவரவேணுமெ ன்றுசொன்னான் அதைஅந்தமந்திரிகேட்டு இனிமேல்தாங்கள்அர ண்மனைக்குட்சென்றால் உயிரோடேவெளியில்வரமாட்டீர்களென்று சொல்லிஅவரைப்போகாமல் தடுத்துஇதுமுதல்ராச்சியத்தையும்வி ட்டுப்பரதேசம்போகவேணுமென்றான் அதற்கந்தராஜனிசைந்துபு றப்பட்டுஇராசாவும்மந்திரியும்மறுதேசம்போய் ஒருபட்டணஞ்சே ர்ந்து அவ்விடத்திற்றனே யிருக்குமளவில் அப்பட்டணத்தின்இராச குமாரத்தி தான்சம்மதிக்கிறமாப்பிள்ளையைக்கலியாணஞ்செய்து கொடுக்கவேணுமென்று தன்தகப்பனிடத்தில்வாக்குறுதிபெற்றிரு ந்தாள் அப்படியிருக்குந்நாளையில் இந்தராசாவும்மந்திரியும் அந்தப ட்டணத்தைச்சுற்றிப்பார்த்துவருமளவில் அந்தராசகுமாரத்திஇந்த ராஜனைக்கண்டுமோகித்துதன்னுடையதகப்பனிடத்திற்குச்சொல்லி யனுப்பிவித்தாள் அதையந்தராஜன்ஒப்புக்கொண்டு இந்தராசனை

ருந்திப்பலவந்தமாய்க்கலியாணஞ் செய்வித்துக்கொடுத்தார் அப்ப
டியேசிலநாட்சென்றபின்பு மாமனாகிய அப்பட்டணத்தினிராசனிற
ந்துபோய் அவர்மருமகனாகிய இந்தராசனுக்குப்பட்டங்கட்டி அரசா
ட்சிசெய்துவருங்காலையில் அந்தராசன்தன்னுடையஸ்திரீயுடன்கூடி
மிகவுஞ்சந்தோஷமாயும் உல்லாசமாகியும் தன்பழையமந்திரிசகித
மாய்ப்பூரணசந்திரிகையான நிலவில்மூன்றுபேரும்பேசிக்கொண்டி
ருக்கும்போது ஆகாயத்திலிருந்து ஒருகள்ளப்பருந்து வட்டமிட்டு
பறப்பதைப்பார்த்து இந்தராசகுமாரத்தி ஓ அரசனே உம்முடையத
லைக்குநேராக ஆகாயத்தில்பறக்கிற பருந்தைநீரறிவீராவென்றுங்
கேட்டாள்.

அதைப்பார்த்துஅந்தராசன் அதுஎனக்குத்தெரியாதென்றான்
அப்போதவள் மிகவுஞ்சிரித்து உம்முடையஸ்திரீ உம்மைத்தேடிக்
கொண்டுபருந்துவேடமெடுத்து வந்திருக்கின்றாளென்றும் அதைக்
குறித்துநீங்கள் போகவேண்டாமென்ன அப்படிசொல்லிக்கொண்
டிருந்துநானுங்கருடனாருக்கொண்டு ஆகாயத்திற்பறந்துபோய்கள்
ளப்பருந்துடன்யுத்தஞ்செய்து நானுமந்தபருந்தும் கீழேவிழுகிறோ
மப்போதுநீங்களந்த கள்ளப்பருந்தை உடனேகொன்றுபோடவே
ணுமென்று முன்னடிப்பேசி தானுங்கருடவேடங்கொண்டு போவ
தால்தன்னையறிந்துவெட்டாமல் விட்டுவிடவேணுமென்றுசொல்லி
கருடவேடங்கொண்டுஆகாசத்திற்போய் கள்ளப்பருந்துடன் நல்ல
யுத்தஞ்செய்து ஒன்றோடொன்றுமல்லுக்கட்டிக்கீழேவிழுந்தது அ
ப்போதுஅந்தராசன மந்திரியைப்பார்த்து எந்தபருந்தைக்கொல்ல
வேணுமென்றான் அதற்குந்தமந்திரிஐயா இவ்விரண்டுபருந்தையுங்
கொன்றுபோடவேணுமென்றான் அதற்கந்தராஜனப்படியே இரண்
டுபருந்தையுங்கொன்றுபோட்டானென்றுமுதலந்தமந்திரியுமரசனும்
சத்தியஞ்செய்துகொண்டுஎன்றும்பெண்ணென்றநாமமெடாமல் அ
வர்களிஷ்டப்பிரகாரமன் அமுதலாய்பேயென்றும் பூனைஎன்றும்பெ
ருங்கூத்தென்றும் பெண்களுக்குபேர்வைத்தார்களென்று (௯) வது
மந்திரி சஹாங்தாருஷாவுக்குச்சொன்னதுந்தவிர மாதரென்றுபேர்
பெற்றவர்களெல்லோரும் மகாதுரோகிகளானதால் அவர்களிஷ்ட
த்தைக்கனவிலுநினையாமல் இருதயத்திலிருந்துநீக்கவேணுமென்றா
ன் அதைசஹாங்தாருஷாகேட்டுச்சினங்கொண்டு ஓமந்திரிநீசொல்வி
யதுகளைநான் அங்கிகரித்துக்கேட்டுஎன்னபேசுகதையைக்கெடுக்கமா
ட்டேன் ஆதலால் எனக்குச்சொல்லசருத்தில் புத்திமதிகளைவிட்டுவி
ட்டுபோகலாமென்றனுப்பிவைத்துப்போட்டு முன்போலவேசோ
கதாகமோகலாகிரிப்பைத்தியமேறி கனுக்கினுங்கென்றுகுலுங்கித்
திரியுஞ் சிரிக்கிவலையிற்சிக்கியிருந்தான்,

—(௧)—

## எ-வது-மந்திரிசொல்கதை.

ஏழாநாளிரவில் மிகவும்அற்புதமுள்ளசெய்கைகளைச் செய்யும் புத்திமானனஏழாவதுமந்திரிமிகவுந்தாழ்மையோடெஸஹராந்தாறுவா விடத்திற்சென்றுசொல்லியகதையாவது ஓமிகவும்கண்ணியமுள்ள புண்ணியராசனே இப்போதுநான் சொல்லப்போகிறசித்திரவிசித்திரமானகதையில்லேவதநீதிகளடங்கியதாயிருக்கும் சுத்தகோளமகாணரும்சம்சாரசுவதம்உற்கலம்மைதுலையென்னும் ஐந்துதேசத்திலடங்கியசுத்தகோளதேசத்தில்ஆநந்தகாரமென்று ஒருபட்டணமுண்டு அந்தப்பட்டணத்தில் வ.லிபமுள்ள ஒருபிராமண னிருந்தான் அவன்எக்காலமும் வேடிக்கைவினோதங்களிலும் உல்லாசங்களிலும் காலப்போக்காயிருந்துதன்பூர்விக வித்யாப்பியாசத்தையும்சாஸ்திரங்களையும் வேதங்களின்சூட்சங்களையுந்தெரியாதவனும் புரோகிதம் அறியாதவனும்வாணாட்காலத்தைவீணாய்ப்போக்கிக்கொண்டிருந்தான் அவனுடையஸ்திரீமிகவும்புத்திசாலியாயும் திரியாவாத்திலும் விசித்திரத்திலுஞ் சூட்சங்களைத்தெரிந்தவளாயிருந்துகாலக்ஷேபஞ் செய்துவருங்காலத்தில்ஒருநாள் அன்னியபதியாயுள்ள ஒருயௌவன புருஷன்பேரில்மோகங்கொண்டு அநேகவிதகாரணபந்தங்களாற் சிறந்துவந்தாள் அப்படிசிலகாலஞ்சென்றபின்வொருநாளும்தன்னுடையசோரநாயகனைச்சேருவதற்குச்சாவகாசங்கிட்டாமற்புருஷனண்டையிலேயே யிருக்கிறபடியால் இவனை எவ்விதத்திலாகிலும்யாத்திரைபோகும்படிசெய்தால் யாதொருசஞ்சலமுமில்லாமல் சோரநாயகனுடன் சரசமாய்ச்சேர்ந்து மருவி வாழ்ந்திருக்கலா மென்று யோசித்துஅன்றிராத்திரிதன்புருஷனுந்தானும்சயனித்துக்கொண்டிருக்குமளவில்அவள்புருஷன்காமவிகாரங்கொண்டுஸ்திரீயைத்தான் புணர்வதற்குள்ள சரசசல்லாப வெண்ணத்தைக்காட்டினன்.

அப்போதவள்கடுஞ்சினமானவளைப்போல் பாவனைகாட்டிதன்னுடன்புணரக்கூடாதென்றும் இவ்விதபோகத்தினல் தனக்குமிகுந்தசந்தோஷநேரிடுமென்றும்இதென்னகிஞ்சித்போகமென்றும்இவள்இன்றுபகல்அடுத்தவீட்டுக்காரியிடத்திற் சென்றுபேசியிருக்கும்போது அவ்விடத்தில்நடந்த பிரஸ்தாபங்களையும் சூதானவார்த்தைகளையுங்கேட்டு மிகுந்த ஆங்காரமும்கோபமுமாயிருக்கிறேனென்றுள் அதைக்கேட்ட அந்தப்புருஷன் அண்டைவீட்டுக்காரிடத்திற்சென்றிருந்தபோதுஉனக்குக்கோபம்வரும்படிக்குநடந்தவிபரஞ்சொல்ல

வேறுமென்றான் அதைக்கேட்ட இந்தஸ்திரி சொல்லியதாவது இன்றையதினம் அண்டைவீட்டுக்காரிடத்திற்குச்சென்றிருக்குமளவில் அவ்விடத்திலெல்லோருஞ்சேர்ந்து அவரவர்களுடையபுருஷர்களைப்புகழ்ந்துபேசிக்கொண்டு என்னுடையபர்த்தாவாகியஉமக்கு உரிய சாஸ்திரப்பரிட்சைகளும் வேதப்பரிட்சைகளுந்தெரியாதென்றும் ஒருபிராமணப்புத்திரனாயிருந்தால் இவ்விதமூடனாகமாட்டானென்றுந்தங்களுடையபுருஷர்களைலோகலோகமெல்லாம் அறியுமென்றும் உம்மை ஒருத்தருமறியமாட்டார்களென்றுமிகவும் புத்தியில்லாதவனும்மூடனுமாயிருக்கிறஉமக்குவாழ்க்கைப்பட்டதினால்தங்களுடன் சரிபொத்தமேன்மையெனக்கில்லையென்றும் சொன்னதைக்கேட்டதுமுதல் என்னுடையசரீரத்தை தீயிற்போட்டதுபோலிருக்கிறதுந்தவிர என்னுடைய துரதிஷ்டம் உம்முடனேகலந்துவாழ்கப்பண்ணியதென்றுமிகவுந்துக்கமாய்ச்சொன்னாள் அதைகேட்டஇந்தப்பிராமணன்தான் கொண்டமையெல்லாமறந்து ஓயெனதுசௌந்தரியமுள்ளஸ்திரீயேநீதுக்கமடையவேண்டாம்எனக்குமிகவும்மானம்வந்திருப்பதால் நான்யாத்திரைபோய்உன்னுடையமனம்சந்தோஷிக்கும்படிசகலசாஸ்திரவேதாப்பியாசங்களையும் கற்றுக்கொண்டுவந்து என்னையவமானமாய்சொன்னவர்களையெல்லாம் உன்முன்பாகஅவமானப்படும்படிசெய்விக்கிறேனென்று சொல்லி மறுநாளுதயத்தில்யாத்திரைப்புறப்பட்டு நெடுந்தூரம்போய்வித்தியாப்பியாசங்கள்செய்யஆரம்பித்தான்.

அவன் போய்விட்டவுடனே அவனுக்குரிய ஸ்திரீயானவள்மிகுந்தசந்தோஷத்துடன் சோரநாயகனை தன்னுடையகிரகத்திலழைத்துமெத்தவும்விநோதமாய் சேர்ந்திருக்கவாரம்பித்து அப்படியேநடந்தேறிவருங்காலத்தில்யாத்திரைபோயிருந்தபுருஷன்சகலவித்தியாப்பியாசம் செய்துக்கொண்டுதன் வீட்டுக்குவந்து சேர்ந்தான்அப்போதவன்பெண்சாதியந்தரங்கத்தில்துக்கமும்பயங்கரத்தில்சந்தோஷமுமாய்புருஷனைவிட்டுப்பிரிவுற்றவளுக்குண்டான அவஸ்தைகளையுஞ்சொல்லி அபிநயமுங்காட்டி மிகவுஞ்சந்தோஷமாய்ப்பேசிக்கொண்டிருந்தாள் அன்றையத்தினம்சாயந்திரவேளையில் சோரநாயகன்சொல்லியனுப்பித்ததாவது இன்றையதினம இராத்திரிக்கெவ்விதமும்வந்து உன்சஞ்சலத்தைநிவர்த்திசெய்விக்கிறேனென்றும் இன்றிராத்திரிக்குநான்வாராமற்போவேனாகில்என்னை உடகபத்திற்பின்னமாயப்பார்க்கத்தக்காதமென்றும் சொல்லியனுப்பவித்தான் அதைக்கேட்டந்த ஸ்திரீமிகவும்விசாரப்பட்டுமறுமொழிசொல்லி யனுப்பித்ததாவதுயாத்திரைபோயிருக்கதன்புருஷன் இன்றைக்குவந்திருப்பதால் நீர்வரு

கிறதற்குச் சவுக்கியப்படாதென்றுசொல்லியனுப்பியதைக் கேட்ட
அந்தசோரநாயகன்சலத்திலிருந்துகரையிற்பாய்ந்தமீனைப்போற்று
டித்து மறுபடியும்நானெவ்விதத்திலும் வருவேனென்றுசொல்லிய
னுப்பிவித்தான் அதைக்கேட்ட அந்தசோரஸ்திரீ மிகவுந்துக்கித்து ச
ற்றேயோசித்துஎவ்விதத்திலும்வருகிறதாய்ச்சொன்ன சோரநாயக
னுக்குத்தடைசொல்லப்பயந்து உமதிஷ்டமப்படியிருக்காற்கசமாய்
வரலாமென்றுசொல்லியனுப்பித்தன்கணவனிடத்திற்சென்றுஐயெ
னதன்பிற்கிசைந்தபத்தாவே நீர் அப்பியாசித்துவந்த சகலவித்தியா
ப்பியாசங்களையும்எனக்குத் தெரியச்சொல்லவேணுமென்றாள் அ
தைக்கேட்ட அவள்புருஷன் மிகவுமகிழ்ந்தயாவரும்புகழ்ந்தேபகம்
நாயகியேகேளும்நாலுவேதமும்ஆறுசாஸ்திரமும்வாய்பாடமாயிரு
க்குமென்று ஒருவேதமும் ஒருசாஸ்திரமும ஒருவருக்குந் தெரியாத
தாய்நானேயெல்லாச்சாஸ்திரங்களுக்கும் பாஷைக்கும் உற்பத்திஸ்
தானமாயிருக்கிறேன் எனக்குச் சரியொத்தவர்கள் ஒருவருமில்லை
யென்றுசொன்னான் அதைக்கேட்ட அந்தஸ்திரீ ஐயோஐயோஎன்ன
மோசம நேரிட்டுப்போச்சுது ஐந்தாவதுவேதம் படிக்கவில்லையே
யென்றாள் அதைக்கேட்ட அவள்புருஷன் ஆச்சரியப்பட்டுஐந்தாவது
வேதமில்லையேலோகத்தில் பிரபலமுள்ளநாலுவேதந்தானேயிருப்
பது அதைத்தான்நான்கற்றிருக்கிறேனென்றுசொன்னான் அதற்கந்
தஸ்திரீயானவள் ஐந்தாவதுவேதப்படியாதவரைமுன்போலவேமூ
டனாயிருக்கப் பார்ப்பேன்என்றாள் மேலும் ஐந்தாவதுவேதம்படியா
தவரையில் யாதொருவேதத்தின் சூக்ஷமான அருத்தங்கள்தெரியா
தென்றும்இத்தேசத்தரசன்ஐந்தாவதுவேதத்தின்சரித்திரத்தைப
ரங்கமாய்ச்சொல்லப்பட்டவர்களுக்கு வெகுமானமும் சொல்லாத
வர்களுக்கு அவமானமும்மரணதண்டனையும்செய்வதாய்ப்பிரசித்த
ப்படுத்தியிருப்பதினுலேசகலபிராமணர்களுசகரும்ஐந்தாவதுவேதம்
படிக்கவேண்டிய அவசியம்நேரிட்டு இப்போதுபடித்துவருகின்றார்
கள் அவர்களில் அந்தவேதந்தெரியாதவர்கள்சந்தோஷமாகியுந்தெ
ரியாதவர்கள்கவலையுடன் துக்கமாகியுமிருக்கிறார்களென்றும் இதுவ
ரையிலும் நீர்யாத்திரைபோயிருந்தமையாலும் உம்மையழைப்பிவி
க்காமலிருக்கின்றார்கள்.

இப்போதுநீர்வந்திருப்பது தெரிந்தால் நிபந்தனையுடனழைப்
பித்து உம்மைக்கேட்டார்கள்நீரந்தஐந்தாம்வேதம்கற்றுக்கொள்ளா
மையாலும்மைககொடியதண்டனைக்குள்ளாக்குவார்களென்றுநான்
மிகவும்பயப்படுகிறேனென்றாள் அதையந்தப்பிராமணன்கேட்டுத்தி
க்கிட்டுஉடல்நடுக்கப்படபடத்துவிடவிடத்துக்கால்கைகளுதறுகி

ஒடும்ஐந்தாம்வேதம்கற்கவேணுமென்னுமாசையால் ஒருவருக்கு
ந்தெரியாமலுடனேயவ்வூரைவிட்டோடிப்போனா னிப்பாலவன்பெ
ண்சாதி தன்னினக்கத்திற்கிசைக்க சோரநாயகனைவருவித்துக்கொ
ண்டுசரசசல்லாப வுல்லாசவைபோகசம்பிரமக் கலவியமளியிற்கலந்தி
ருந்தாள்॥இப்படியிருக்க ஐந்தாம்வேதம்கற்கப்போனபிராமணனஞ்சி
நாகுலமுற்றுத்தியங்கித்திரிந்துமயங்கி பகன்ராத்திரியெல்லாம்நி
த்திரையற்றுமெத்தகவலைகொண்டு இளைத்தின்றகுரங்குபோலெங்
கிஅங்கிருக்குமொரு குளத்தருகாமையிற்றங்கியிருந்து இங்குவாத்
தக்கவர்களென்னபேசிக்கொள்ளுகின்றார்களோ அதையறிவோமெ
ன்றுதலைநிறையமுக்காடுபோட்டுக்கொண்டு பல் விளக்குகிறவனைப்
போலிருந்தான் அப்போதந்தக்குளத்தில் தண்ணீர்மொள்ளுகிறதற்
காகப்பெண்ணீர்மையிற்சிறந்தவைந்துபிராமணப்பெண்கள்வந்துபல்
துலக்கிக்கொண்டிருக்கும்பிராமணனைப்பார்த்து ஒருத்திசொல்லுகி
றாள் அடியக்கா இதோயிருக்கிறபிராமணன் ஏதோவொருகவலையுற்
றிருக்கிறானென்றாள் இன்னொருத்தி நீசொன்னதுசரிதான் ஆனாலிவ
ன்கல்வியைக்குறித்துக்கவலைப்பட்டவனாய்த்தோற்றுதென்றாள் இ
ன்னொருத்திஇவன்பெண்சாதியாற்புத்திபிசகிப்போனவனாய்க்காணு
தென்றாள் இன்னொருத்தி இவன்தீர்க்கப்புத்தியில்லாமற்றியங்கித்தி
ரிகிறானென்றாள்,

இவ்வாறுநிச்சயித்தவைந்துஸ்திரீகளுஞ்சேர்ந்து அந்தப்பிராம
ணனிடத்திற்போயறிவோமென்றுசென்று ஓசுவாமிகளேநீரிவ்வி
டத்திலிப்படிபொருங்கியிருக்கிறகாரணமென்னவென்று விசாரித்
தார்கள் அவர்களைநோக்கியந்தப்பிராமணன் அம்மாநான்சும்மாயிரு
க்கிறேனென்றான் இல்லையும்முடையமனக்கருத்தைச்சொல்லு
மென்றுகேட்டார்கள்அப்பாலந்தப்பிராமணன் தன்பெண்சாதியாற்
சொல்லியசங்கதியாவற்றையும் ஆதிபோடந்தமாகச்சொன்னான் அ
தைக்கேட்டஇந்தஸ்திரீகளைந்துபேரும்ஐயோஇவன்யோக்கியன் இ
வன்மனையைவிட்டு இவன்பெண்சாதி தனக்கிச்சைப்பா
னாயகனுடன் கூடிப்புணருகின்றாள்போல்தோணுகிறது அந்தச்சு
தறியாமல்இவனிப்படிக்குன்றிப்போய்க் கலங்குகிறானென்பதாய்த்
தங்களுக்குள்திடப்படுத்திக்கொண்டுநாமெவ்வொருவரும் இவன்
ருத்தைத்திருத்திவைக்கவேணுமென்றுஎண்ணமுடையவர்களாய்த
க்கதருணத்தில்தண்ணீர்மொண்டுக்கொண்டுதிரும்பியபோது ஒருத்தியக்

னையழைத்து ஐயரே நீரெல்லாவேதமும் படித்திருந்தும் ஸ்திரீக
ளுடைய மாறுபாடுமுதலாகிய மோசத்தைப்படியாமற்போனீர் ஆ
கையால் இவ்வுலகிலுண்டாகிய துன்மார்க்கப்பெண்களின் துரோ
கசிந்தையை விபரமாய்த்தெரிவிக்கினேறும் அதை நீர்கற்றுக்கொ
ண்டால் உலகத்திலுண்டானபெண்களின் குணங்களெல்லா முமது
க்குத்தெரியும் இதுதானைந்தாம்வேதமென்பதென்று அவனையழைக்
துக்கொண்டுபோய் தன் வீட்டில் உபசரித்துவைத்து மேற்கூறிய
ஜாலதந்திர வேதத்தைத்தானே காட்டத்தொடங்கினாள்.

௧-வது - ஸ்ரீயின் தந்திரம்.

பின்பு அவள்வீட்டிலிருந்த புருஷன்முதலாகிய பந்துக்களும்
இந்தப்பிராமணன் ஆரென்றுகேட்டபோது இவர் என்னுடைய த
மக்கையாள் குமாரன் என்னைப்பார்க்கவந்தாரென்றுசொன்னாள் அ
வர்களெல்லோரு மவள்பேச்சைநம்பி தம்பி வாபோயிருவென்று
பசரித்தார்கள் அப்பாலிவள் அன்றையத்தின மந்தப்பிராமணனுக்
கு நல்லபோசனம் புத்துருக்குநெய் பணியாரம்-வடை-தோசை அ
ப்பளம் பாயசம் போளி ஆமவடை பற்பலகனிவர்க்கங்களுடன் இ
ராஜோபசாரஞ்செய்துவந்தாள் அன்றிராத்திரி வீட்டிலுள்ள யாவ
ரும்போசனஞ்செய்து நித்திரைபோய்விட்டபிற்பாடு இந்தப்பெண்
ணானவள் அந்தப்பிராமணன்படுத்திருந்த தனியறையிற்போயுட்கா
ர்ந்து சிலசரசவார்த்தைகளைப்பேசி அவனுக்கிஷ்டத்தையுண்டாக்கி
யறைவிட்டுப்பூட்டிச்சாவியைப்போட்டுவாங்களென்றாள் அதற்க
ந்தப்பிராமணனுடன்படாமல் ஐயோசிலநாழிகைக்குமுன்னே என்
னை உன் தமக்கைமகனென்றுரைத்தாயே இப்போதிந்தவக்கிரமத்து
க்குடன்படச்சொன்னாயேயென்று கண்ணைமூடிக்கொண்டான் அப்
போதவள்வோங்கிக்கூச்சலிட்டு ஐயோ அநியாயமே ஆரோவொரு
வன்வந்து என்னைப்பெண்டாளப்பிடித்துக்கொண்டான் எல்லோ
ரும்வாருங்கள் வந்துபாருங்கள் என்மானத்தைக் காருங்களென்று
ரைத்தாள் அவளோசையிட்டதைக்கேட்ட யாவரும் அக்கம்பக்கத்
திலுள்ளவர்களும் வீட்டிலுள்ளவர்களுமோடிவந்துஎன்னடாபாவி
யென்று தடிகாம்புகளுடன்புகுந்தார்கள் அவர்களைக்கண்டபிராம
ணன் இடிவிழுந்தமரம்போலேங்கிப்போய்த்தெய்வமே இதென்ன
பிரமாதம் இப்போது நாமென்னசொன்னாலும் நம்பமாட்டார்களே
யென்று தலைகவிழ்ந்தவண்ணமே சாய்ந்துவிட்டான்.

உடனே அவள்யாவருங்கூடின ஆபாசத்தைக்கண்டு கண்ணீர்விட்டழுது எனக்கு மூத்தவள்மகன் என்னைப்பார்க்கவந்து சாப்பிட்டுபடுத்திருக்கும்போது ஜன்னிபாதவலியென்னும் வியாதியாலுடல்கட்டுண்டு ஒடுங்கிவிட்டான் இதற்குசதுர்முகமாத்திரைகொடுத்தாற் சவுக்கியமாகும் வைத்தியனைப்பாருங்கள்தேடியழைத்துவாருங்கள் சந்தடிசெய்யாதீர்கள்கூவாதீர்கள் கொஞ்சங்காற்றுவிடுங்களென்று யாவரையும் பலபல வேலைகளுக்குப்பற்று முதலிய ஒத்திரம்போடுவதற்கான பச்சிலைமூலிகைகளுக்குமனுப்பிவிட்டு அறைவிட்டுக்கதவை சாற்றிக்கொண்டு பார்ப்பானைப்பார்த்து இப்படியென்னசொல்லுகிறாய் வைத்தியர்வந்து அவிழ்தங்கொடுக்கவும் ஒத்தரங்கொடுக்கவும் பற்றுபோடவுந் தெம்படா அல்லது என்னைக்கூடியின்பம் விளைக்கிறாயா என்னசெய்கிறாயென்றுகேட்டாள் அப்போதந்த பிராமணன்பயந்து அம்மா இவள் ராட்சதியாயிருக்கிறாளென்றினைந்து அவளுடன்கலந்து ஆபாசத்திலிருந்தான்.

அப்பால் ஸ்ரீயானவள் சொன்னவண்ணம் வைத்தியர் முதலியவரைக்கூட்டிவந்தார்கள்பச்சிலைமூலிகைகளுங் கொணர்ந்தார்கள் அவர்களைப்பார்த்து சற்றுநேரஞ்சும்மாயிருங்கள் நான் கொஞ்சங்கபாடசிகிச்சைசெய்தேன் அதிற்சற்றேலகுவாயிருக்கிறதென்றாள் பண்டிதர்களாய்வந்தவர்கள் கையைப்பிடித்து நாடிபார்த்து இன்னங்கொஞ்சம் படபடப்பிருக்குதென்றும் இனிபிரங்குமுகமென்றுஞ் சொல்லிப்போனார்கள் அப்பால்அந்தப்பெண்கொடியானவள்வேதியனைநோக்கி ஓலிபனோ பார்த்தீரா முன்னே அக்காள்மகனென்றேன் பிற்பாடு ஆசைநாயகனென்றனைபவந்தேன் அப்பால் ஆரோ சோரன்சாசஞ்செய்யவந்து அல்லற்படுத்துகிறானென்றேன் என்புருஷன்முதலியபேரைக்கூட்டி விபாதிக்காதவென்றேன் வைத்தியர்களாலிறங்குமுகமென்றனுப்பிவிட்டேன் உன்னையு மித்தனைபேருக்குமுன்பாகச் சிகிச்சைசேர்த்தேன் பத்துபேருக்கும் பத்தினியாயிருக்கிறேன் இப்படித்தான் ஸ்ரீகளினுடையதந்திரயுக்தி இதைக்கண்டுபிடிக்க இந்திராதிகளாலுமாகாது உன்சொந்தஸ்ரீயு மிப்படிதான் ஒருவனைப்பிடித்துக்கொண்டு உன்னையேமாற்றிவிட்டாள் இதைச் செவ்வையாயறிந்துகொள்ளத்தக்கதை இதல்லாமலும் என்னுடன்கூடவந்தவர்களின்னும் சொல்லுவோர்களிருக்கிறார்கள் அவர்களிலொருத்தி [illegible] போயங்கிருந்து அவளுடைய இச்சைத்தந்திரத்தையறிந்துகொளுளும் இதுதான் சாலதந்திரவேதமென்பதென்றுரைத்தவனை [illegible]வீட்டுக்கனுப்பிவிட்டாள்

## ௨-வது-ஸ்ரீயின் தந்திரம்.



பின்புமருஸ்திரீயானவள் தன்னிடத்திற்குவந்த வேதியனை
யழைத்துக்கொண்டு அண்டைவீட்டிலிருந்துவருகிறபாவனைபோலவ
ந்தாள் அவளைப்பார்த்து இவள்புருஷனானவன்பெண்சாதியை நோ
க்கி இந்தப்பிராமணன்ஆரென்றுகேட்டான் அதற்கவள்சொல்லியதா
வது கேட்டீர்களா உங்களுக்குச்சாப்பாட்டுவேலையைத்தீர்த்துவிட்
டண்டைவீட்டப்பாத்தையிடத்திற்குப்போயிருந்தேன் அவ்விடத்
தில் சிலபெண்களெல்லோருங்கூடிப்பேசி ரகசியப்பண்ணிக்கொண்
டிருந்தார்கள் அதைக்கண்டநான் என்னங்கள்சிரித்துவிளையாடிக்
கொண்டிருக்கிறீர்களென்றுகேட்டேன் அவர்கள்சொன்னார்கள் எ
ங்களெங்கள்புருஷர் மிகுந்தவிந்தையானகாரியங்களெல்லாஞ் செ
ய்யவல்லவர்களென்றார்களதென்னவிந்தையென்றேன் அதிலொரு
த்திசொன்னாள் என்புருஷன்கண்களைக்கட்டிவிட்டுபால்கறக்கச்சொ
ன்னால் ஒருதுளியேனுங்கீழேசிந்தவொட்டாமற் கறப்பானென்று
ரைத்தாள் அதைக்கேட்ட நான்நகைத்து அடிபோடி ஈதொருபெ
ரியகாரியமா என்புருஷன் இதற்குமேலாகச்செய்வாரென்றேன்ஒ
ருத்தருமப்படியேசெய்வார்களென்றாள் கண்களைமூடிவிட்டுப் பால்
கறக்கிறதுபெரிதல்ல அத்துடன்கூடமுதுகிலுஞ்சாய்ந்து உலுக்கிக்
கொண்டிருந்தாலும் ஒருதுளிப்பால் ஒழுகாது இப்படிஎன்நாயகன்
செய்வாரென்றேன் உம்முடையகுணாதிசயத்தையும் வல்லமையை
யுமறிந்த நான் மெத்தவிசேஷமாய்ப்பேசவேஎங்கேபார்ப்போமெ
ன்று இந்தஅய்யரையனுப்பிவித்தார்கள் இவரும்மைப்பரிட்சைபா
ர்க்கவந்தாரென்றுசொன்னாள் அதைக்கேட்ட அவள்புருஷன்போ
டிபயித்தியக்காரி ஈதொருவதிசயமா கண்களைக்கட்டிப்போட்டுக்க
றந்தாலும் கைநிதானமில்லையா கருத்தில்லையாவென்றான் அப்படி
வாயினாற்சொல்லுவதில் காரியமில்லை கையினாற்செய்துகாட்டி அவ
ர்களுக்கெல்லாம் வெட்கம்வரும்படி என்சொல்லை நிலைக்கநாட்டிநீ
ருமேன்மைபெறவேண்டுமென்றாள் உடனேயவனெழுந்தரையோ
இங்கேவாரும் என்பசுவைநான்கறக்கிறேன் என்பெண்சாதியென்மு
துகிற்சாய்ந்து என்னையசைத்துக்கொண்டிருக்கட்டும் நீருமாக்கும்
ஒருதுளிப்பால் புறம்பிற்சிந்துதா பாருமென்றான் அப்படியேபாற்
குடுவையை எடுத்துக்கொடுத்து பசுவினிடத்தில் நிதர்னமாய்க்குந்
திக்கொண்டபின்பு அவன்கண்களைக்கெட்டியாய்க்கட்டிவிட்டு அத்
தினிச்சாதியாகிய பதினியானவள் பின்புறத்திற் சாய்ந்துமல்லாந்
தபடியிருந்துவந்த அந்தப்பிராமணனை யாட்டுமென்று வஸ்திரத்தி

னுவிட்டமைத்திரையைவாங்கி யரையைக்காட்டினாள் குறைவில்
லாப்பிராமணன் விரைவிற் கூடியமட்டும் பின்னுக்குவாங்கி முன்னு
க்கிடித்திசைந்தான் அதுகாலையிலவள்புருஷன் அடிபோ இன்னம
சைத்தப்பார் நன்றாயசை ஒயாமலாட்டென்று பாலைக்காரந்தான்
இந்தப்பிராமணனும் சுக்கிலபாலைக்குடுவையிற்கறந்தான் அவனும்
பால்சிந்தாமற்கொண்டுகாட்டினான் இவளும் ஒருதுளி சிந்தாமற்க
ண்டுமூடினாள் அப்பாலிவனும் நுரைத்ததும்பியது இப்பாலிவளு
டையபுருஷன் பெண்சாதியைப்பார்த்து எவளோசொன்னாளென்ற
பே இப்படியென்னசொல்கிறாயென்றான் ஆவுங்கள்சாதகமும் புத்தி
ம்யுக்தியுங்கள்ளங்கவடில்லாதாமனமின்றொருத்தருக்குண்டோவெ
ன்றுகொண்டாடி ஏனையபேர எல்லாங்கிட்டவிருந்து நீரும் ஆட்டிப்
பார்த்தீரே ஏதாகிலுமொருதுளிப்பால் புரம்போச்சாஸ்திரிகளு
டைய குணத்தையறிந்தீரா அய்யோ கெட்டவர்களாச்சேயென்று
ள் அதற்கந்தப்பிராமணன் ஒருதுளிகூடச்சிந்தக்காணோமே இது
பெரிய ஆச்சரியந்தானென்றான் நீரேபோய் ஆச்சரியப்பட்ட சிறிக்
கிகளுக்குச் சொல்லுமென்றவனையனுப்பிவிட்டுத்தன்கணவனுடன்
கூடிக்கலந்துவாழ்ந்திருந்தாள்.

---

## ௯வது, ஸ்ரீயின்றந்திரம்.

---

பின்பு இந்தப்பிராமணனைக்கண்ட மூன்றாஸ்திரீயானவள் நீ
போய் அதோயிருக்கிற குளக்கரையிலிரும் ஒருபெண்பிள்ளைவ
ந்தழைப்பாள் அவள்சொல்லிபடி கேட்டுவந்து இந்தவூர் பிடாரி
கோயிற்கதவோரத்திலிரும் அவ்விடத்திலொருபுருஷன்வந்தழைப்
பானவனுடன்வாருமென்று சொல்லியனுப்பிவிட்டு தன்வீட்டுக்குப்
போய் வீட்டிலுள்ள வேலைகளெல்லாஞ்செய்து உடம்புகுளித்து அ
லங்காரம்பண்ணிக்கொண்டு தன்புருஷனுக்கும் அன்னமிட்டுதானு
ஞ்சாப்பிட்டபின்பு பகல்பன்னிரண்டுநாழிகைக்குத் தாம்பூலம்போ
ட்டுக்கொண்டிருக்கிறவள் ஐயோ அப்பாவென்று கூச்சலிட்டாள் பு
ருஷனோடியோடிவந்து என்னவென்னவென்றுகேட்டான் ஆகா
என்னரையையிழுத்துக்கொண்டு அவஸ்தையாயிருக்குது அரைநா
ழிகையி லென்பிராணன் போகும்போ லிருக்குதென்றாள் அதைக்
கேட்டவள்புருஷன் இதற்கென்னசெய்யலாமேந்திழையே விசன
ப்படாதேயென்றான் நல்லது அண்டைவீட்டுக்கார ஆச்சியைக்கூப்
பிடும் அவளுக்குத் தெரியும் இதற்கு வேண்டிய பக்குவம் பண்ணு
வாளென்றாள் அந்தப் பாவியவள்சொல்லை நம்பி யப்படியே
போய்க் கூவி ஆச்சியை யழைத்துவந்தான் அடி சிச்யா இவ்

கேவாவென்றுள்ளேயழைத்து சொல்லுகிறாள்தாமரைக்குளக்கரை
யில் ஒருபிராமணனிருக்கிறானவனை உன்னைப்போல் பெண்வேஷம்
போட்டுபிடாரிக்கோவிலில் வைத்துவாவென்றாள் அவளப்படியே
செய்துவைக்குநான்தேடப்போனமருந்தகப்பட்டது அதைதிடப்படு
த்திலங்கேதவினென்றுசொல்லிவிட்டு ஆச்சிபோடவிட்டாள் அவன்போ
னபிற்பாடுபுருஷனையழைத்து ஆச்சியைக்காணும்பிடாரிக்கோயி
லுக்குப்போய் பிரார்த்தனை செய்துவருகிறேனென்றுபோனான் அவ
ளைச்சீக்கிரமழைத்துவாவெனறனுப்பினாள் அவனப்படியேசென்று
ம்பெண்வேடம் பூண்டிருக்கும்பிராமணனை ஆச்சியென்றழைத்துவந்
தான் அவனையுள்ளேயழைத்துக்கொண்டு புருஷனைப்பார்த்து நான்
சாவேனுபிழைப்பேனு தெரியாதுநீஎன்கிட்டயிரு ஆச்சிபூனிலைக்
கமென்றுசொல்லுகிறாள்பூனிலக்கமாறுல் இவனைவிடபக்குவம்பண்
ணுவாரில்லை ஆகையால் இவ்வீட்டுக்குதிரைகட்டி நீ நம்பக்கத்திலிரு
மென்றாளப்படியே படுதாகட்டிவிட்டு புறம்பேயவனிருந்தான் அவள்
உள்ளேயிருந்தபிராமணனைக்கொண்டு ஓசைப்படுப்படி பின்பமறுப
லிக்கிறாளப்போதவள் புருஷன்எப்படியிருக்குதென்றுகேட்டான்ந
ன்றாயிருக்குதென்றுசொல்லிக்கொண்டேவேலை நடத்தியபோதப்பு
ருஷனையழைத்து இந்தப்புண்ணியவதி என்னைத்தான்தீர்த்தாள இ
வளைநான் அக்காளென்றுமுறைபடிக்கிறேன் நீருமது மனமகிழ்ச்சி
யாய்வேண்டியவெகுமதிகளைக்கொடுமென்றாளப்படியேபொன்பொ
ருள்முதலியவெல்லாங்கொடுத்து என்னையுமென்பெண்சாதியையும்
காப்பாற்றியஆச்சியென்று அடிமேல்விழுந்தனுப்பினான் அந்தப்பி
ராமணைப்பார்த்து பார்த்தீராஎன்புருஷனைவிட்டுஉம்மையழைத்துவ
ரச்செய்து அவனையுந்திரைமறைப்பில்வைத்து ஓசைகேட்கஆசைமுடி
த்துவரச்செய்துவெகுமானமுங்கொடுப்பித்துக்காலிலும்விழச்செய்
தேன்பாரும்பெண்களுடையவொருமோசத்தை யாருங்கண்டறியப்ப
டாதுஉமதுபெண்சாதியும் எங்களிலொருத்திதானென்றுரைத்து அ
வனைப்பின்னொருத்திவிட்டுக் கனுப்பிவிட்டாள்புருஷனைவன்னா
னமருந்துகொடுத்தாளென்றுகேட்டான் அறைவாழைப்பழத்தில்மூ
ன்றுதுளிதிவாகவம்விட்டாளென்று சொல்லிமகிழ்ந்திருந்தாள்.

௨௰-வது-ஸ்ரீயின்றந்திரம்.

---

இந்தநான்காவது பெண்பிள்ளையானவள் இந்தப்பிராமணனைக்கண்
டேவந்தனைவழிபாடுகேட்டுஒவ்வொபேரோடிருந்தவனத்தில் மறைந்திருபென்

கோதுராத்திலிறங்கி கூடாரமடித்து தேவேந்திரமோகயோக போக
தியாகத்துடன்வீற்றிருந்தான் அந்தச்சமயத்தில்நடந்த அதிசயத்தை
சொல்லுகிறேன்கேளும்சஹாக்தாருஷாவேளென்று கிளிசொல்லியது.



## ஹோரவர்பானுவைஜெஷங்கென்பவன்
## வழிபிலபகரிக்குஞ்சரித்திரம்

இப்படியாக ஜெஷாக்காத்துக்கு அப்புரத்திற் கூடாரமடித்து பெண்சாதியான ஹோரவர்பானுவென்பவளுடன் மருவியிருந்தபாஷா குமாரன் தன்றுணைவியை கூடாரத்தில் வைத்துவிட்டு படைவேட்டிக் கொண்டு இஷ்டசகிதாளுடன் சமுத்திரத்துக்குப்போய்மீன்வேட்டை யாடிக்கொண்டிருந்தான்,

இந்தஹோரவர்பானுவின்பேரில் வெகுகாலமாய்மோகங்கொண் டிருந்தஜோஷாககாத்துவர்த்தகன் ஜெஷங்கெம்பவன்ஹோரவர்பானுவை இருபாஷாகுமாரன் களியாணமபண்ணிக்கொண்டு ஊருக்குஅழைத் துப்போறேனென்று கேள்விப்பட்டுமனமதளராமல் எவ்விதமாகிலு ம அந்தப்பெண்ணை பிரிக்கவேண்டுமென்று திடங்கொண்டு அநேக தந்திரயுக்தி அறிந்தவெருகாலத்து கிழவியொருத்தியையழைத்து அ ம்மாபாட்டி உன்னாலாகாதகாரியமொன்றுமில்லை நீவேணுமென்று நி னைத்தால்கானககஹோரவற்பானைப் பொருந்துவேன் இல்லாவிட்டால் வருந்துவேனென்றுசொல்லி நீசற்றுஉபாயத்தினாற்கொண்டுவந்துவிடு வையாகில்உனக்குஇரண்டு லட்சவராகன்கொடுக்கிறேனென்றனுப் பினன் அப்படியேநல்லதென்று அந்தக்கிழவியிந்தஹோரவர்பானுவி ற்றிருக்கிறகூடாரத்துக்குச்சமீபத்தில் வந்திருந்துகோகோவென்பதா ய்க்கூச்சலிட்டுச்சத்தமொலைசெயுடுக்கழுதாள் அந்தத்தொனியைக்கே ட்டஹோரவர்பானுமெத்தவுமிரக்கமுள்ளவளாய் தனக்குரியதாதியை ப்பார்த்து அடிசேடியே நமதுகூடாரத்துக்கருகாமையிற் கூச் சலிட்டுக்கொண்டழுகிறகிழவியாளைப்பார்த்துவாருங்களென்றனு ப்பினாள்அதேப்படியே தாதிமார்கள்போய்பார்த்துக் கேட்குமிடத்தி ல்அந்தக்கிழவி வயிற்றிலடித்துமாயிலு மோதிக்கொண்டு அம்மாநானுயிர் பிரிந்தஅங்கமடி உடலழிந்த ஆவியடி துணைபிரிந்த மானடிசோடுபிரிந் தபெட்டையென்று சொல்லித்துக்கத்துடன் விக்கிமுக்கிச்சோர்ந்தழு தாள்அதைக்கேட்டஹோரவர்பானுடைய தாதியர்கள்கேட்டுமெத்தவி சாரப்பட்டுப்போய்ஹோரவர்பானுடன்சொல்ல அதைக்கேட்ட ஹோரவ ர்பானுவவள் அந்தப்பாட்டியையழைத்துவரச்சொல்லி நீயாரடியம்மா வென்றுவிசாரிக்குமிடத்தில் 'அடியம்மா என்னுயிர்க்குயிராகிய அன் னமே சொர்ணமே சின்னவயதில்நானுன்னை வளர்த்தஅன்னையல்லவா என்னைமறந்த இன்பசாயகன்றன்னைப்புணருமேயிதைக்குறித்துநான் விசனப்படுகிறேன்கண்ணே நீயென்னையெப்போதுவளர்த்ததாய் அதனா லக்து நின்னைப்பிரிந்தே அதிலுமறியாதவயதில்வளர்த்தாயாக்கும் நல்ல து இப்பவுனக்கென்ன வேண்டுமதென்றால் எனக்கொன்றும் வேண்

டாம் நான்சாகிறவரைக்குமுன்னிடத்திலிருந்துகடைசியில்ஒருபிடிம
ண்கொடுப்பாயென்னும் ஆசையைப்பற்றி வந்தேனென்றான்அப்படி
யேயாகட்டுமென்றுடன்கூடி யிருவென்றுவைத்துக்கொண்டாள் இ
வ்விதமாயிருக்கக்கிழவிசாயுங்காலவேளையில் வெளியேபோய்வந்துமீன்
வேட்டையாடப்போன உன்புருஷன்மேலான விநோதங்களையுனக்கு
க்காண்பிக்கும்படியா யழைத்துவரச்சொன்னாரென றுண்மைபோற்
பேசிக்கூட்டிக்கொண்டு கடற்கரைக்குப்போய் இதற்குமுன்னேயிட
ப்படுத்திவிட்டிருந்தவர்த்தகன் ஒதைக்கெம்பலன் தனதுபடவிலேறிக்
கொண்டுசொத்து முழுவதுமோடி பொழுதுவிடியுங்காலத்தில்ஒருதீவி
லிறங்கிஅழகியவீடொன்றைப்பேசி அந்தவீட்டிலிவளையும் கிழவியையு
மவைத்து தானுமிவளுடன் பொருந்துவதற்கான முயற்சியோடிரு
ந்தான்-

அவளைக்கண்ட ஹோரவர்பானு ஓகோயிதுமோசமென்றுணர்ந்து
ஆஆயெப்படியுமாமனுஷாயகன்கையைத் தப்பவைத்துக்கொண்டுபோ
வாயென்றுன்னி ஓ வர்த்தகரேநீரேதிங்கேவந்தது என்பாக்கியமோஎ
ன்றபோவென்றாள் அதைக்கேட்ட வர்த்தகனானான் மெத்தமையல்
கொண்டிருந்த வென்னைவிட்டு இன்னொருவன்வசப்பட்டுப்போனையே
நானுன்னைவிடவேணுதருந்தகிழவியைய ஆளாக்கி உன்னைக்கொண்டுவ
ந்துவிட்டேன் பார்த்தையாவென்று சாமர்த்தியமபேசினனப்போது
ஹோரவர்பானு எல்லா மர்மத்தையும விசனத்தையும் மனதிலடக்கிக்
கொண்டுவெளியிலென்ன பேசினளென்றாள் ஓவர்த்தகரேநீர்நிறைந்த
செல்வமுற்றவர் செவ்வையாய்சாஸ்திரங்களைக்கற்றவர் தந்திரயுக்திச
க்திபெற்றவர் உமமிடத்திலெனக்கிருக்குமாசையை அளவிட்டுச்சொ
ல்லிமுடியாது அப்படியிருக்கஎனசெச்சைசக்கொளுசகடலில்விழுந்து
விட்டதைக்கண்டெடுத்துவந்த ஒருவனுக்குஎன்தகப்பன எனனைக்கலி
யாணமபண்ணிக்கொடுத்தான் அனறுமுதலின்றையவரையிலும் உன்
பேரிற்கொண்டமோகத்தால் என்னுடைப்பிராவென்று எனனிஷ்
டப்படிநீர் நாயகனாய்வாய்த்தால்அன்றுமுதலாறுமாதத்திற்குவிரதமி
ருந்துவெகுபேருக்குசோறுபோடுகிறேனென்றும வேண்டிக்கொண்
ண்டேன் என்னேனபினபயனுல்நான்கேட்டபடிக்குஇந்தபுண்ணிய
சாலியபன் பாட்டியால்எனனையநுபவிக்கவும் அனக்கனுய்விட்டிலஇ
னிமேல்உனக்குமெனக்குசகருந்தடையில்லைநானுமக்குச்சொந்தமானேன்
நான்பிரார்த்தனைசெய்தவிரதம ஒருசத்தினைமுடித்து விடுகிறேனென
றாள் ஆ என் கண்ணுபமே யப்படியேசெய்யென்று வேண்டியவெள்
ளியும்பொனனுமசெலவுக்குமுதலியசாமக்கிரியைகளுக்கொடுத்துவா
சலிற்பாராச்சவுக்கிய யேற்படுத்திவைத்து விட்டுக் கிழவியைப்பார்த்
துபத்திரமாய்ப்பாதுகாத்துவாருமென்றுசொல்லிப்போட்டுத்தானப
டகேறிஇவ்விடத்துசரக்குகளை இனனொருடத்திக்கொண்டுபோனன்இ
நதக்கவலையிப்படியிருக்க ஹோரவர்பானுவைவெகுபாடுபட்டுவிவாகம
பண்ணியபாதுசாகுமாரன மீனவேட்டையாடி வேடிக்கையாகமீனகளை
பிடித்துதனதுபெண்சாதிக்குவிளையாட்டுக்காட்டுவோமென்றுடன்

செழுத்துகிறகிழவன் தச்சக்கிழவனெனும்பைமாடாக்கிலகிழவன்மந்
திரிகுமாரவிவர்களுடன் கூடாரத்திலவந்து பார்த்து தாதியரைக்கே
ட்குமபோதுசமுத்திரவேடிக்கைபார்க்க நீங்களழைத்துவரச்சொன்ன
தாய்ஒருகிழவிவந்தழைத்துவந்தாளேயெனறார்கள்

அதைக்கேட்டுஅலரிவிழுந்து ஐயோ மோசம்போனேனென்று
அதிசீக்கிரத்தில் சமுத்திரக்கரையிற்போய்ப்பார்க்கும்போதுவெகுதூ
ரமப்பழக்கமுள்ள படவுவிடுங்கிழவன் கடலினிரோட்டத்தையுமகா
ற்றுவோட்டத்தையுங்கண்டு ஐயாஇஷ்டர்களே யேரவர்பானுவை மோ
சஞ்செய்துக்கொண்டுபோனவன் வெகுதூரமபோகவில்லை கிட்டதா
ன்போகிறான் சமறுடனே புறப்பட்டால் அவனைக் கண்டுபிடிக்கலா
மென்றுபடவேறிகப்பல மார்க்கமாயத் தேடித்திரிந்து வரும்போது
யேரவர்பானுவந்திருக்கிற அக்கரைக்கண்டு அவ்விடத்தியவிசேஷ
ங்களைவிசாரித்து அவளிருக்கிறவிட்டண்டைக்கு மாறுவேடங்
கொண்டுபோய்காவலிருக்கிற சேவகரைப்பார்த்துஇந்தவீட்டில் குட
க்கூலிக்கிடமகப்படுமாவென்றுகேட்டார்கள் அடேஆருங்காணும் ஆ
ண்டிகளேஇவ்விடத்திலசவுராஷ்டிகென்பவரின் இஷ்டனாயகியாகிய
யேரவர்பானுவென்று சந்திரிக்கிறாள் உங்களுக்குச் சோரகப்படு
மவிடமப்படாதுபோவெனறுமுடுக்காய்த்துரத்திவிட்டார்கள்

இவர்கள்அந்தவிட்டுவாசடையிலிறங்கி இரண்டொருமாதமிருந்
துமசஷராவிலபேரைச்சொலலிபயிரங்கப்படுத்தி தாதிகளுமொருவே
ளை அவள்விட்டுக்குப்போய் நாலுபேரைப்போற்சாப்பிட்டு அவளைச்
செவ்வையாய்ப்பாாத்து யேரவர்பானுவென்பவளிவள்தானென்றறிந்
து இவளைக்கொண்டுபோவதற்கான யுத்திசெய்து தச்சனைக்கொண்டு
டமருசானொன்றமைத்து அதற்குசகல சூஸ்திரங்களுமமைத்துசம
யம்பார்த்திருந்து ராத்திரிபத்துநாழிகைக்குமேல் இந்தடாமஞ்சான்
பேரிலேறிக்கொண்டு யேரவர்பானுவிருக்கிற விட்டுவாசலிலிறங்கியே
ரவர்பானுவையும் படவுவர்த்தகஞ்செய்த பாவிக்கிழவியையுமவாரி
யெடுத்துப்போட்டுக்கொண்டுதாங்களவருமேறி சூத்திரத்தையுமு
டுக்கினார்கள்அது ஆகாயத்திலெழுந்துவிறறென்றலருமபோதுகிழவி
கூவினாள்அவளையெடுத்துச் சமுத்திரத்திலெரிந்துபோட்டு அப்பால்
விடியக்கலத்தில் தங்களுடையசுதேசம போய்ச்சேர்ந்து தாய்தந்தை
முதலியபந்துக்களுக்கண்டு களிக்கும்படியாய்த் தான் சமுத்திரத்திற்
பார்த்துமோகங்கொண்ட மைதலாளிவள் தானென்றுமையலாற்சிறந்
த புருஷன்பெண்சாதியிருவரும் தகப்பன்தாய்முதலியயாவரையுந்தொ
ழுதுமுத்தமிட்டு தங்கள்மக்களுருக்குச் சமாச்சாரமனுப்பிதன்சேனை
கள்தாதிகள்வருமபடிசெய்துடமருசிலாயகதிரி குமாரனுடனும்படவு
க்காரகிழவனுடனுமதச்சவேலைதெரிந்த சூத்திரதாரியுடனும் எனும்
பையுமிருக்கிற கிழவனுடனுமயேரவர்பானுவினுடனுமை இன்பமாக
நெடுங்காலமவாழ்ந்துபுத்திரமித்திராதிகளைப் பற்றிருந்தான்படசா
குமாரன்கேட்டீரோ சஷாங்காதஷாவே பட்டவர்பதத்திலிருப்பாா

களென்னும்பழமொழிபோலஎமக்குநல்லகாலம் வருமென்றேஇடசி
ளியானது இன்னமுஞ்சிலகதைசொல்லத்தொடங்கியது.

---

## இப்பாற்கிளிசொல்லுகிற-இரண்டாவதுகதை.

கேளும்ராஜசிங்கமே மாளுவபொங்கமென்னுமொருபட்டணம் அந்தப்பட்டணத்தில் வியாக்கிரம பராக்கிரமனென்றொருஅரசனவனுக்குப்பாக்கியனென்னுமந்திரியிருந்தானிருவரும ஒருமனதுடையவராய் மநுநீதிமுறைமாறாமற்றுரைத்தனஞ்செய்துவருநாளில்எப்பொருட்குமவல்லகடவுளினருளால்செப்புதற்கரியசெல்வங்கள்படைத்தும்புத்திரபாக்கியமென்னும புண்ணியப்பொருளில்லாமல் மெத்தவுமெண்ணிவிசனமாயிருந்தார்கள அப்படியிருக்கின்றநாளில் பூர்வபுண்ணியவசத்தினால்இராஜனுக்கொருபிள்ளையுமந்திரிக்கொருபெண்ணுமஓரேசுபமுகூர்த்தத்திற்பிறந்துஅதனாலராஜனும் மந்திரிநன்மையடைந்துகோதானம்பூதானமுங்கொடுத்து ஆண்டவருடையபேருதவியினால்பனிரண்டாநாளில்ராசன்பிள்ளைக்குப பயேறுஎன்றுபெயரிட்டுமந்திரிபெண்ணுக்குச்சகோராவென்றுபெயரிட்டு பொன்னொருதட்டும் பூவொருதட்டுமாகவளர்த்து அந்தப்பருவங்களிற் செய்யவேண்டியசடங்குகளெல்லாநடத்தி ஐந்தாவதுவயதில் பள்ளிக்கூடத்தில் வைத்துப்படிப்பித்தார்கள் அப்போதந்தப்பிள்ளையும்பெண்ணுமெப்போதும்பிரியாமல் உண்ணுதல்படுத்தல்முதலியகாரியங்களிலேயும்ஒருவரையொருவர் விலகாமல்ஒருவர்மனமுங்கலந்து உற்றதற்றதுகளைபேசியனைவருமவரும குணமுமணியும்வினைதமுகமும்போல்நேசமுற்றுவளர்ந்துகலைக்கியான முதலியசாஸ்திரங்களெல்லாங்கற்றுவிந்வதிாத்தால்மேற்பட்டுப்பதுவப்பது பால்யராஜர்கள்பெற்றவர்கள்முதலியமற்றவர்களும் பொற்றெட்டிலே பிள்ளையும இனிப்பொருந்தியிருக்கப்போகாதென்று குலாச்சாரங் கோத்திராச்சாரங்குறித்துப்பிள்ளையைராசன்வீட்டிலும பெண்ணைமந்திரிவீட்டிலும் பிரித்துவிட்டார்கள் அதுமுதல்ராஜகுமாரனாகிய பயரேருவெனபவன் சகோராவென்னுமந்திரிகுமாரத்தியை நினைந்துநினைந்து பருவிப்புரிவதென்னுமவையகவாழ்க்கைச்சொல்லுக்கிணங்கிமயங்கித்தியங்கிவாடிவருந்திப்பொருந்திமௌனமா இருந்துசாஸ்திரமுதலியசகலமுமறந்துபோசனமுதலிய பொருளுந்துறந்து தந்தைதாய்பேச்சைத்தள்ளிநடந்து சிந்தைநொந்துருகி தியக்கமபிடித்துஉன்மத்தனாகி யொன்றுந்தோன்றாமலபேய்பிடித்தவர்போலத் தெருத்தெருவாகத்திரிந்தலைந்து உருத்தெரியாமலுடலுங்கருத்துநித்திரைபிரிந்து கெட்டுயிர்ப்பிரிந்துகற்றவர்கற்றவர்கண்டுபேழிக்க இளைத்து ஏளிதனதன்னைநாடுதேசத்தார்கால்வருணத்தர்க்கணடு பரதவித்துக்கண்ணீர்விட்டழுது தவத்திற்பிறந்தருபதிமைந்தன அவத்திவிப்படி யருந்தாமோ இளவரசாகிஎம்மையாண்டருளும் இராசகுமாரனுக்கிபபேர்ப்பட்ட நிதிவந்தெனன விதிவந்ததென்று உபசரித்துமணி மேவடி விசாரித்துப்பிறந்தநாள்முதற்கொ

ண்டு இன்றவளர்க்குசிறந்தமந்திரிகளால் இறந்துபோம்விகாரமெய்தி னானென்று இப்பாவருமறிந்து இராசனிடத்திற்போய் ஐயையோ அநியாயமாய்உமதுகுமாரன் உயிர்விடத்துணிந்தான் இப்போதேமந்திரிமகளைப்பேசிக்கலியாணம்பண்ணிவிட்டால்பிழைத்துப்போவான் அவனைப்பிடித்தபெருமோகப்பேயுந்தீருமென்றுபேசினார்கள்

அந்தப்பேச்சைக்கேட்டவிக்கிரமபராக்கிரமன் கோபித்துதந்தைதாய்சொற்படி நடவாதபிள்ளை இருந்தென்ன இறந்தென்னஎனக்கப்பிள்ளைபிறந்ததுமல்லவானிந்தப்பிள்ளையாலேசுகந்துறந்தேனென்றுநாட்டைவிட்டுகாட்டிலே ஓட்டிவிடச்சொன்னான் அதைக்கேட்டுகொட்டார்முதலியபெருந்தனக்காரர்தங்கள்வீட்டிற்போய்ச்சேர்ந்தார்கள் இச்சங்கதிகளைக்கேட்டபயரோவென்பவன் இனிக்காரியமில்லையென்று கண்கலக்கிப்பரதேசம்போகத்துணிந்து கலந்துஒருபேச்சுமந்திரிமகளுக்கறிவிப்போம் அவள்பள்ளிக்கூடத்திலேசிநேகமாச்சே அவள்கருத்தையுமறிவோமென்று தனக்குப் பாற்கொடுத்த தாறப்பாய் வீட்டுக்குப்போய்நீ ஆய்மந்திரிமகளால்மாய்க்கும்படியானமார்க்கம்வந்துநேரிட்டதனைத்தந்தையுமறிந்து தள்ளிவிட்டிருக்கிறார் இனியிந்தவூரிற்றங்கப்படாது கனவைப்போன்றஉன்றுப்பரதேசம்போகிறேனென்றுமந்திரிமகளுக்கு ஒருவார்த்தைசொல்லிவந்தால் மெத்தவு முத்தமமேயெனக்குச்செய்த வெகுமானமுபகாரமாயிருக்குமென்றுவேண்டிக்கொண்டான அந்தப்பாலகாரியானவள் அப்படியேநல்லதென்றுமந்திரிமகளிடத்திற்போய் இந்தச்சங்கதிகளைத் தெரியப்படுத்தினாள் அதையவள் கேட்டுப் பதைபதைத்துத்துடிதுடித்து என்னிஷ்டராஜனைப்பிரிந்தநாள்முதல்வெகுகஷ்டமனுபவித்துஅவருடையமனமெப்படியோவென்று சந்தேகித்திருந்தே னிப்போசமாதானமாச்சுது நீதயவுசெய்துராத்திரி பனிரெண்டு நாழிகைக்குக்குதிரையைக்கொண்டு வந்து என்னுடையகன்னிமாடத்துக்கடுத்த விடத்தில் வைத்திருக்கும்படி அவருக்குத்தெரிவிப்பாயாகில நானும்புறப்பட்டுவருகிறேனென்றுதக்கவெகுமதிசெய்தனுப்பினாள் அந்தத்தாற்பாய் அப்படியேபோய் ராசகுமாரனிடத்திற் சொல்லமந்திரிமகளின்மனக்கருத்தறிந்தபயோராம சுதிருவம்சத்துக் குதிரைபோலிரண்டுகுதிரைகளைத்தன்னரண்மனையிலிருந்து பிடித்துவந்து சகோராவென்பவன்நியமித்தவிடத்தில்நிறுத்திக்காத்திருந்தான அந்தமந்திரிகுமாரத்தி சொன்னவாக்கியபடிக்குச் சிலவஸ்திராபரணங்களுடன்வந்து குதிரையின்மேலேறி இராஜகுமாரனுந்தானும் நாட்டைவழிவிட்டுகாட்டுவழிபுறப்பட்டு ஓட்டநடையுமாயைம்பதுகோசதூரம போமபோது விடியற்காலத்தில் ஒருகாட்டிலிறங்கிஇளைப்பாறியிருந்து மறுபடியுங் குதிரையேறிபகற்காலத்தில்மலையடிவாரங்கள்அடர்ந்த வனத்திற்றங்கி போசனமுதலியதுவுமில்லாமலுற்றெட்டாய்க் குதிரைமேலேறிபந்தமந்திரிமகளுக்குக்களைப்புக்களைப்புமிக்கமலாற்றியபோது குதிரைச்சேணத்தைக்கூ

ட்டிப்பரப்பி அதன்மேலவளைப்படுத்து சித்திரைபோகச்செய்து இ
ராஜகுமாரன்வில்லும்பாணமுமெடுத்துக்கொண்டு பி சமுதலியதுன
ணுக்கிட்ட வரவொட்டாமல் இராத்திரிமுழுமையும் விருந்துலாவிக்
கொண்டிருந்தான் அவனுக்கெதிரில் ஒருவெங்கைபுலியொன்று அவ்விடத்
தில்தூங்கிக்கொண்டிருக்கிற சகோரா வெனபவளைப்பாக்கினைத்துநி
ல்வந்தவேங்கையை பயோராம்கண்டு பாணத்தாலடித்துக் துரத்தின
ன் அந்தவேங்கையானதுஒன்னாரமிட்டோடிப்போது அதை விடாமற்
றாத்திபுதறுமுதலிய காடுசெடிகளெல்லாம்புகுந்துவேசரிப் பொழு
துவிடியுங்காலத்தில் அந்தப்பெரும்புலியைப் பிடித்துக்கொன்று தத
னுடையவாலுங்காலுங்கூடிய தோலையுடையாளமாககொண்டு மந்தி
ரிமகனுக்குமகிழ்ச்சியுண்டாகவேணுமென்றுமனமகிழ்ந்துதிரும்பிய
போதுவழிதுறைமுதலியதிக்குதிலசதெரியாமல்கண்டகண்டகாடெ
ல்லாந்திரிந்துகதறிக்கதறிவருந்திமந்திரிமகனைப்பிரிந்துவாய்விட்டழு
துமலைக்காடெல்லாமலைந்துவாடிக்குலைந்து மறைக்காடென்னுமநகர
ஞ்சேர்ந்து வழிஞனுயிருந்தான்,

அவன்சரித்திரமபபடியிருக்கவனத்திற்படுத்தச் சன்னைமறந்தா
சித்திரைபோன மந்திரிகுமாரத்தியானவள புனத்திற்கிளிபோற் பொ
ருந்தியெழுந்து பவராவென்னுமபடிகுதானைவக்காணுதல் செயராவென
த்திரிந்துவருந்திக் கலங்கிபுலம்பிக்கண்ணீர்வடித்து தெய்வமேகதி
யென்றுதேறிவாய்மடித்து இராசகுமாரனுடைய உடுப்புகளினுல் ஆ
ண்பிள்ளைவேடந்தரித்துகுதிரைமேற்சேணமிட்டேறி மிகேதபாவெ
னறுபேர்வைத்துக்கொண்டு காடுகளெல்லாம அலக்கலக்காய்த்தேடிவ
ருமபோது ஒருபால்யன்குதிரைமேலேறிப்போவனைப்பார்த்து அவ
ர்சானேதன்னிஷ்டராஜன அலைந்தலைந்துபோகிறாரென்று அதி
வேகமாய்த்தனதுகுதிரையை விட்டுக்கொண்டுபோய் கிட்டநெருங்கிப்
பார்க்குங்காலையில் அவனுமிவளையாசையாய் பார்த்தான் ஓகோயோ
சம்வந்தமென்றுபாவைதானைதமொழிந்து அவனைநாசப்படுத்தி அவன
குதிரையைப்பிடித்துக்கொண்டு கடவுளைக்குறித்துத தொழுதுதனக்
கொருகுறைவுமவராமலகாக்குமபடி பிரார்த்தித்தபோதுஅனேககாய்க
னிகளைப்பறித்துதின்றுதாகமும்பிரிதசேனைப்போதுறங்கி சிலநா
ள்வனத்திலுலாவிவருநாளையிலொருநாள் தடவீட்டுமெபத்திராதி
பனொருவன படைமுதலியசேனைகளுடன் வனவேட்டையாடிவரும
வழிதனில் ஒருகுதிரையின்மேலேறிருகுதிரைமேலேறிப்போகிற
உருவைப்பார்த்து இதென்ன ஆணோபெண்ணோவென்று ஐயப்பட்
டுசமீபத்தில் நெருங்கி சலாஞ்செய்து ஐயா தாங்களிடம எங்கிரு
ந்து எங்கேபோகிறீர்கள் தங்கள் பெயரென்னவென்று கேட்டான்
இவள் உன் ஊருமபெருமென்னவென்று அவன்வாய்பிறப்பாலறிந்
துகொண்டு அப்பால் தன்னுமையமாறத்துக்குறித்து தன்பெயாதிரே

பதுதென்றுசொல்லிவியாபாரமூலமாய்ப் போமேனென்றான் அதை
க்கேட்டவிகடப்பத்ராதிபன்சந்தோஷப்பட்டுஇந்தமுகமுந்தமு
ள்ளபெண்ணுருவைத்தோற்றுவிக்குது ஆனாலீஸ்வரசிருஷ்டி யெப்
படியோவாமறியோமென்றெண்ணி மிகவு மரியாதையாய்நிலத்திற்றாழ்க்
துவணங்கிநீங்களெனது நகரத்துக்கு வரவேண்டுமென் றழைத்தான்
அப்போதவனுடன் அதிசமாய்க்கலந்து பேசாமலும் தன்னைப்பெண்
ணென்று அவனறியாமலும்பெருமைக்கிணக்காமலும்மெத்தவுமிரு
வாயிருந்து நமக்குமெத்தவேலையிருக்குதென்றுசொல்லியும்அவன்கு
ற்றமில்லாமல் வருந்திக்கூப்பிடுவதினால உமதிஷ்டத்தப்படியாகட்டுமெ
ன்று அவனுடனே பட்டணத்துக்குச்சென்று அவ்வாண்மனைவேடிக்
கைவினோதங்களையுங்காட்டக்கண்டு அவனாலமைக்கப்பட்ட விடுதியி
லிறங்கியிருந்தவுபசாரங்கடத்த வனுபவித்திருந்தான் இப்படிசிலநா
ட்சென்றபின்பு இரவும்பகலும் நெருங்கிப்பழகி வார்த்தையாடிவரு
கிறவழக்கத்தினாலும் அநேகப்பழக்கத்தினாலும் பெண்ணென்றெண்
ணியபெருஞ்சந்தேகம நீங்காமல் அவளுடன்சேறவேண்டுமென்றிச்
சைமேலிட்டுஅச்சந்தேகத்தாற்றடைப்பட்டிருந்த அரசனனவன்தனக்குப்
பெரியதாதியையழைத்து ஓதாதியே நான் வேட்டைக்குப்போயிருந்த
காட்டிற்றனித்துவந்தஇந்த ஆணுருவையழைத்துவந்தேன் காணிவள்
பேரிற்கொண்டிருக்கிறமோகமோ இவ்வளவென்றளவிட்டுச்சொல்லி
முடியாது ஆனால்இதசப்பால்யன்வெளிக்குஆண்பிள்ளைவேஷமாகவு
மந்தரங்கத்தின்ற்பெண்பிள்ளையாயுமிருக்கிறதாம் என்னைமருட்டி
க்கொண்டிருக்கிறதுநாள்செட்ட பிரமைதிரும்படியாய் ஒருநாளைக்
குஇவருடன்கூடப்படுத்து எனமோகத்தைத் தீர்த்துக்கொள்ளவே
ணுமென்றெண்ணியிருக்கிறேன்இதற்குநீஎன்னசொல்லுகிறாயென்று
கேட்டனதற்கத்தாதி சொல்லியதாவது ஐயா இராஜகுமாரனே நீர்
நினைத்தபடிசெய்யத்துணிவீராகில் ஒருவேளைபுருஷனாகவேயிருந்தா
ல்புருஷனைப்புருஷன் புணரவந்தானென்றும் ஒருவேளை பெண்ணாயிரு
ந்தாலதுராக்ரதமாய்ப் பெண்டாளவந்தா னென்றுமக்கு அபகீர்த்தி
யானவார்த்தை சம்பவிக்குமதனா லுலக முமமைப்பழிக்குமப்
படியுமமை ஒருவரும்நம்பமாட்டார்கள்மேலும் தாக்கிவினைசெய்யெ
ன்பதுநீதிவாக்கியமிருக்குது ஏதோகாரியத்தையுந் திரயோசனைசெ
ய்து முடிக்கவேண்டிய தாகையால் கடவுளின்சிருஷ்டி அனேகபே
தம அதைக்கண்டவ ரியாவருமில்லை சிலபோ முகத்தில் மீசையி
ல்லாமல் பெண்கள்போல் பேசிக்கொண்டு பெண்ணுருவா யிருக்கிற
துண்டு சிலர் மேல்களெல்லாம ரோமக்களிறைய முளைத்து ஆணு
ருப்போர் பேச்சுமூர்க்கமெல்லா மிருக்கிற துண்டு அவைகளை

தெரிந்துகொள்ளாமல் ஆணைப்பெண்ணென்றும்பெண்ணையாணென்றும்வீணாய்நினைத்துவிட்டாள்காணாக்கடிக்குமருந்துதேடிப்புத்தியபிருக்கிறப்போல்முடியுமேளென்றாள் அப்படியானால் என்மோகமுந்திரவேணும் ஆனோபெண்ணோவென்றுநினைத்தவென்சந்தேகமுமனஸ்தாபமுந்திரவேணடும்இதற்கென்னசொல்லுகிறாயென்றுராசகுமாரன்தாதியைக்கேட்கத் திசற்றேநிதானித்துவொருயுக்திசொன்னாள் அதென்னவென்றால்ஒருநாளைக்குவிருந்துசெய்து இஷ்டாளுடன்சாப்பிட்டுசந்தனபுஷ்பதாம்பூலமும்பரித்துபாதநாட்டியபெண்களால்ஆடல்பாடல்கச்சேரியும்நடத்திதம்மிடத்திலொருஸ்ரீயுமவளிடத்தில் ஒருஸ்ரீயுமாகவணைப்பிவைத்து சூதலலீதலீலைபுரிந்து அனுபவத்தாற்கண்டறியத்தக்கதொன்று அகற்குடன்படாவிடில் மற்றொருநாளைக்கு தடாகத்திற்சலக்கிரீடைசெய்துவிளையாடித் தெரிந்தேகொள்ளத்தக்கதொன்று அதுவுந்தப்பினால்வனத்திற்பிரவேசித்துமிருகவேட்டையாடச்சென்று அறிந்துகொள்ளத்தக்கதொன்று அதுவில்லாமற்போனாலும்சாயத்தைவார்த்துபூராயத்தைமாற்றென்பதொன்று இந்நான்குவிதத்தினாலுங்கண்டறிந்துவிடலாமென்றுயுக்திசொன்னாளதைக்கேட்டராசகுமாரன்சந்தோஷித்துஇதுநல்லயுக்திதானென்று ஆண்ரூபமுள்ளமந்திரிமகளிடத்திற்குவந்துமாநவிசிற்சிலயிங்கிதம்பேசிக்கொண்டிருந்தது இன்றைக்கு நானொருவிருந்துசெய்கிறேனென்றுபுலவுபச்சடி பச்சடிசாயபோசனம்பண்ணி பலவிஷ்டாளுடனிருந்து விடங்கருங்கி சந்தனசுகம்பக்சாப்பிட்டுக்கச்சேரிசெய்துஅதிலுயர்ந்தாஞ்சினியைத்திட்டப்படுத்தி ஆண்வேடந்தரித்திருக்கிற மந்திரிமகளிடத்திற்கொண்டுபோய்விட்டுஇவளைநீங்ளனுபவியுங்கள் நானொருத்தியைப்புணருகிறேனென்றுவிட்டுச்சரசம்பண்ணச்சொன்னான் அந்தகஞ்சினியைக்கண்டுகொஞ்சியசொகுசுபுருஷனைப்போற்பேசி வஞ்சியேநானொருவிரதங்கொண்டிருக்கிறேன் அவ்விரதமுடியும்வரையில் இன்பசுகசந்தோஷமென்பதைஎள்ளத்தனையும் விரும்பாதஞ்சியிருக்கிறேனென்று வந்தவளுக்குப் போகமகிழ்ச்சியுண்டாகப்பேசிப் பொழுதைவிடுத்தாள் அதைக்கேட்ட ராசகுமாரன் ஆச்சரியப்பட்டுநல்லதிரமனமுண்டாயிருக்குதென்றுசிந்தித்துபின்னொருநாள் சிங்காரவனத்துக்குப்போய் வேடிக்கையாய்த் திரிந்துநல்லவெய்யல்வேளையில் நாமிருவரும் இந்தடாவியில்நீஞ்சிவிளையாடுவோம் வாருங்களென்றழைத்தான் அப்போது ஆண்ரூபங்கொண்டமந்திரிமகள் எனக்குக்கொஞ்சம்சலதோஷமாயிருக்கின்றது மேலும்இவிடத்தியசுத்தஜலம் என்றேகத்துக்கொத்துக்கொள்ளவில்லை ஆகிலும்நான்கொண்டவிரதமுடியாமல்ஸ்நானம்பண்ணமாட்டேனென்றுதடுத்தாள் அப்பாற்பின்னுஞ்சிலநாள்தரித்து இராஜகுமாரன் ஆணுருவாயிருக்கிறமந்திரிமகளிடத்தில்வந்து என்கிராமத்திற்சிலபுலிகரடிகளும்காட்டுமாவும்கோட்டான் எருமைகள்முதலிய கூட்டம்பைகளுங்கழுதைக்குரத்திகளும்வந்துவிழுந்து பயிர்புலங்களையழித்துவிடுவதாய்க்குடிப

டைகள்நைந்து முறையிட்டுக்கொண்டார்கள் நாமிருவரும் வேட்டை
யாடிவருவோம்வாருமென்றழைத்தான் அதற்குமந்திரிமகளானவள் அ
ப்படியேயல்லது போவோமென்றொத்துக்கொண்டாள்நாளைக்காலமே
போகலாமென்று ராஜகுமாரன்பேசி ஆசையோடு தன்வீட்டுக்குப்
போனான்

அப்போதே இந்தமந்திரிமகளானவள்குதிரையேறிக்கொண்டுகா
ட்டுக்குப்போய் அவ்விடத்திலிருக்கிறவேடர்களையழைத்துபற்பலமிருக
ங்களையடித்து அதனதுவாலுங்காலுந்தோலுங்கொண்டுவந்துகொடுப்
பீர்களாகில் உங்களுக்கு நல்லவெகுமதிசெய்கிறேனென்றாள் அப்பேச்
சைக்கேட்ட ஆண்பெண்களுடன் வனவேடராகியவேழைகளெல்லோ
ரும் தடிகாம்புகயிர்களுடன்போய் அனேகமிருகங்களைவெட்டிதோலு
ங்காலும்வாலுங்காட்டி வேண்டியதுணிமணிகளைப்பெற்றுவாழ்த்திப்
போனார்கள் பின்புஅத்தோலும்வாலுங் காலுமெடுப்பித்துக்கொண்டு
தானிரங்கியிருக்கிறசாகையிற் கொண்டுவந்துவைத்திருந்தாள்மறுநாட்
காலமேஇராஜகுமாரனெழுந்து தானொருகுதிரையேறிஇவருக்கொரு
குதிரைகொண்டுவந்து தாருங்கள்வேட்டைபோவதற்கென்றுவருந்திய
ழைத்தான் அவனை மந்திரிகுமாரத்திபார்த்து இனியென்னத்துக்குஅங்
கேபோகவேண்டியதுநான்போய்ராத்திரிமுழுதும்வேட்டையாடிமிரு
கங்களையெல்லாஞ்சாடி நாசமாக்கிப்போட்டு உமக்கு வேலையில்லாமற்
செய்து உமதுகுடிப்படைகளுக்குஞ்சவுக்கியந்தேடிவந்தேன் இனிநீர்
போனால் நான்கொன்றுவிட்டமிருகத்தைத்தா நீர்சொல்லவேண்டுமெ
ன்றுபரியாசமாகச்சொல்லி தன்விடத்திலிருந்தமிருகத்தின்வாலுந்தோ
லுங்காட்டி அவனையுமழைத்துப்போய் இன்னின்னவிடத்தில்நான்வே
ட்டையாடினேனென்பதாய் அவ்விடத்திற்செத்துகிடக்கிறமிருகங்களையு
ந்தெரிவித்தாள் அதைப்பார்த்துராசகுமாரன் ஆச்சரியப்பட்டு வெட்க
முற்று நீரென்னையல்லாமல் வேட்டையாடியவின்பநன்மைக்காக நமதி
ஷ்டர்களுடன்மகிழ்ச்சியாய் சாராயஞ்சாப்பிடுவோம் வாருமென்றழை
த்தான் அதற்கந்தமந்திரிப்பெண்ணானவள் ஆம்நானுஞ்சாராயங்குடித்
துவெகுநாளாய்விட்டது எனக்குமெத்த அதிலாசையாயிருக்கிறது நீர்
போய்த்திட்டப்படுத்தும் இராத்திரிக்குவேடிக்கையாயிருந்து சாப்பிட்
டுவிளையாடுவோமென்று அதைக்கேட்டராஜகுமாரன் இந்தச்சொல்லு
ண்மைதானென்றுணர்ந்து பிர்-பிராந்தி மதோரா சின்னு ஒயின் ஷேரி
தித்திப்புகிளாரட்டி பட்டைபத்தாய்முதலியதினுசுகள் அபின்கலக்கி
எப்போபொழுதுபோமென்று காத்திருந்து இராத்திரியில் வந்தழைத்
தான் இவளிதற்குள்ள கதன்றேகச்சாயலைப்போலே ஒருபொய்வயிறு
ஏற்படுத்தி தானுடுத்தியிருக்குமஉடுப்புகளினுற்றெரியாமல்மறைத்து
வைத்து இராஜகுமாரனுடன்போய் மேசைமேலிருந்து ஆசையாகிய
விதிதானுடன் போசனமுதலியதுமுண்டு வாசனைபூசி மோசஞ்செய்ய
நினைத்தவர்களை மோசஞ்செய்யலாமென்னும்விதியையனுசரித்து அவ
ர்களுடனவிசுவாசமாயிருந்து இவளேமுன்னடியெழுந்து சாராயதினு
சுகளைப் பளிக்குக்கிளாசுகளிலூற்றி மெத்தமரியாதைசொல்லி ஆளுக்

கொருகிளாசுவார்த்து தானுமொருகிளாசுசாப்பிடுகிறவள்போல அபி
நயங்காட்டி பொய்யாகிபவயிற்றிற்புகும்படிவிட்டாள் பின்புஅவர்களொ
வ்வொருவராஎழுந்து ஆளுக்கொருகிளாசுவார்த்துவந்தனத்துடன் இ
வளுக்குக்கொடுத்தார்கள் அத்தனையுங்கள்ளாமல்வாங்கிவாங்கிஉட்கொ
ள்ளாமற்கொண்டாள் இந்தப்படிராத்திரி இருபதுநாழிகைவரையிலுங்
குடித்துக்கொண்டிருக்கிறபடியால் இராஜகுமாரன்முதலியயாவருந்த
ங்களைமறந்து உறங்கிப்போனார்கள் சாருயங்களை உள்ளுகிராக்காமலும்
உறக்கங்கொள்ளாமலுமிருந்த இவ்வொருத்தியானவள் அந்தராசகுமா
ரனுடையகிரீடத்தை எடுத்துக்கொண்டு அவன்மூக்கையுங்காதையுங்
கொஞ்சமறுத்து மற்றவர்களையுமப்படியே காதையுமூக்கையுமடக்கப்
படுத்தி தானகட்டியிருந்த பெய்வயிராக்கிய தோற்பையை யவிழ்த்து
மேஜைமேல்வைத்து அவர்களின்ஒருபக்கத்துமீசையையுங்குறைத்து
விட்டு குதிரையின்பேரிலேறிப பொழுதுவிடிவதற்குமுன்னே திதகற்
றுந்திருநகாஞ்சேர்ந்துவீதிவீதியாய்த்திரிந்துஒருபூவாணிச்சிவீட்டை
க்கண்டு அவடத்திற்போயிறங்கினாள் எழுபதுவயதுள்ள அந்தபூவாணி
ச்சி இந்தமகாரூபசுந்தரவடிவைக்கண்டுமாறுதகாமலெதிரியாவதிக்கொ
ண்டுஓடிவந்தணைத்து தன்னுடையபருவமத்தகாலத்திலுற்செய்யும்பக்
குவங்களைச்செய்து அப்பாஐயா எங்கிருந்துவருகிறாய் மெத்தவும்வே
ஷ்டையடைந்திருக்கின்றாயே வேந்தனேஏந்தலேஎன்றுவேண்டியவுப
சாரங்களைசெய்தவர்களைப்பார்த்து அம்மாநானொருவர்த்தகனுடையபி
ள்ளை என்தகப்பன்கனகமாபீதாம்பரசனவானென்பவன்என்பொல்லா
தகாலத்தில் நன்நகரைவிட்டுப்பிரிந்துபுலம்பி பூமிகள்தோறுந்திரிகி
றேனென்றுகண்ணீர்விட்டாள் அதையப்பூவாணிச்சிகேட்டுஅந்தோம
கனே ஸ்ரீமந்தனானாலும் தீவினையைத்தள்ளிநடந்தவர்களில்லை அதுஆ
ரையும்விடாது அந்தஅவதிவினையால் பூர்வத்து இராசாக்களெத்தனை
யோபேரென்னென்னகேடுகெட்டார்கள் எத்தனைபாடுபட்டார்கள்இந்
ததுன்னுமோடுகெட்டார்கள இழிவினாற் பிராணனைவிட்டார்கள் நீய
தைகேட்டதில்லையா விசனப்படவேண்டாமகனே நாளைகேவருது
நற்பழஞ்சோறும பின்னைக்கேவருதுபேரும்பிரக்யாதியும் கனகமானம
எனமகனேஎன்னை நீவேறாகநினைக்காதே உன்னன்னையைப்போல் நா
ன்இந்நிலத்திலிருக்கிறேன் நீஎத்தனைநாளைக் கிருக்கவேணுமோ அத்த
னைநாளைக்கு இதுஉன்வீடாகவும் நான் உன்தாயாகவும்நினைத்து நீசுக
மாயிருவென்று குதிரைக்கட்டுமிடங்காட்டி இதற்குவேண்டிய கொள்
ளும்புல்லும் கடலையுங்கோதுமையும் குதிரைக்காரர்களையும் திட்டப்
படுத்தி இவனுக்குவெந்நீர்வைத்து கொல்லையிற்போய்குளித்துவிடெ
ன்றுசொல்லிப்போட்டு தான்சடைக்குப்போய் நல்லபதார்த்தமவாங்கி
வந்து சமைத்துச்சாப்பிட்டு ராமேசாபசாரமாய்த்தன்பிள்ளையைப்போ
ல் வைத்துக்கொண்டிருந்தாள்.

அப்படிசிலநாளிருந்து ஒருநாள்பூவாணிச்சியைப்பார்த்து அம்மா
நான்சும்மாயிருந்துசாப்பிட்டால்தின்னுகிறசோறுங்கறியுஞ்செறிக்கவி

ல்லை ஆகையால்வியாபாரம்பண்ணலாமென்றுநினைக்கிறேனென்ன அப்
படிசெய்யடாமகனேயென்று ஐந்நூறுரூபாய்ப்பையை எடுத்துவந்து
கையிற்கொடுத்தாள் அதைவாங்கிக்கொண்டுபஜாருவீதியில்நாலுபேர்
வரப்போகவிருக்கிறவழியிற் கடைவைத்திருந்து தனனாயகன் ஒருவே
ளைசெய்வசித்தால் அவ்வழிவாராருவென்று கடைவைத்துக் கொண்
டு வியாபாரம்பண்ணினான் அப்பட்டணத்திலுள்ள ஆண்பெண்ணியா
வரும்புருஷமோகமாய் இவனோருகந்திருவன்போலுமிருக்குதென்றுகா
சுக்குகாசிலைமிகுத்துங் கொடுத்தாலும் எலலாச்சரக்கு மிவனிடத்தி
லேவாங்கிவந்தார்கள்பாக்கிபோற்பணமுங்குவிந்தது

அப்பாலிவனிடத்தில்யார்வந்துசேதியென்றுகேட்டாலும் உத்தி
யோகஸ்தாள்வந்தாலுமஇயாவருககும்பணங்காசென்றுஎண்ணிப்பா
ராமற்றாராளமாய்ச்செலவு செய்கிறதினாலே இவர்மகாவந்தாவென்
று கொண்டாடினார்கள் அழகிலுஞ்சிறந்தவன் ஔதாரியத்திலுமுயர்
ந்தவனென்றுவித்வான்களும்பாடிப் பரிசுபெற்றார்கள் சவுக்காரர்களெ
ல்லோரும் இவனுடையமுகவசீகரத்தினால் இவனுக்கே கப்பற்சரக்கு
களையெல்லாம் ஒப்பந்தம்பண்ணுகிறார்கள் நாணயத்தில் இவனுக்கொ
ப்பானவர்களொருவருமில்லை இப்படியிருக்கிறநாளில்அந்ததேசத்து
ப்பாட்சாவின் குமாரத்தி பயேபயிக்குஎன்பவள் முத்துப்பல்லக்கிலே
றிக்கொண்டு சுற்றிலும் அலகுசாபுள்ளாங்குழலூதிவரும்படியாப்பாங்
கிகள் பார்த்திகள் தேடிகள்தோழிகள் சூழ்ந்துவரத்தக்கதாய் காவற்க
ட்டேனதங்களுடையதோட்டத்துக்குப்போயிருந்துவருகிறவள் மு
கத்தில்மூடியஜாலர் வழியாய்க் கடைவீதியைப்பார்த்துக்கொண்டு வ
ந்தாள்கடைக்காரெல்லோருமெழுந்துநின்றுமரியாதைசெய்கிறார்கள்ஒ
ருகடையிலிவன் உட்கார்ந்து வியாபாரம் பண்ணுகிறவன் எழுந்திராம
லும் இவள்வருகிற பல்லக்கைபாராமலுமிருக்கஇவனாடா இவவளவு
முக்காயிருப்பதென்று உன்னைநோக்கி அவளதுபொன்னுருவைக்கண்
டு கன்னியானவள் வன்னவன்னியமின்னலொளியாற்பூத்ததாமரைமலர்
போலுங்குழைந்துவிதிர்விதிர்ந்து தன்னைமறந்துசாய்ந்துவிழுந்துகண்
ணயின்றுவென்றுபிதற்றி அன்னாகாரமிலலாமல்உணபதுஉடுப்பதுபூசு
வதுபேசுவது ஆடுவதுபாடுவது யாவற்றையுமறந்துவீட்டிற்குப்போ
ய்தலைசுற்றிபாட்டியகாமச்சுரத்தால் வேதனைப்பட்டு சதனைக்கும்பிட்
டுசாதனைசோதனை வேண்டாம் என்னெண்ணப்படிக்குச்சகாயமாகத் த
யவுசெய்யுமெனறுபிரார்த்தனைபண்ணிதன்னுயிர்ப்பாங்கியைவருவித்
து அன்னமேகடைவீதிகிழக்கடைவ டையில் புட்டக்கடைக்குப்பக்க
த்திலிருப்பவனை எனக்குப்பக்கத்திற் புருஷனாகப் பொருத்திவைத்தா
ல்நான் பிழைப்பேன இல்லாவிட்டாலிறப்பேனென்றாள் அப்படியேதா
திபோய்ப்பார்த்து மோகந்தலைக்கேறி அதின்சங்கதியைப் போய்சொல்
லமாட்டாமல் அந்தக்கடையிற்றானேஉட்கார்ந்துவிட்டாளிவளிப்படி
ஆசைகொண்டலைய இந்தச்சங்கதியைக்கேட்ட பயேபயிக்கென்னும்

பாக்ஷாகுமாரத்திவேறொருத்தியைவிடுத்துவிசாரித்துவரச்சொன்னாள் அவள்போய்துாரநின்றுபார்க்கும்போதே சேர்ந்துவிழுந்துவிட்டாள் இதைக்கேட்டராஜகுமாரத்தி பின்போனவளுக்கு முன்போனவள்மே லென்றுஅவளுடையகடைக்குப்பக்கத்திற் கடைவைத்திருக்கும் பூவா ணிச்சியையழைத்துவரச்சொல்லியவளால்சங்கதிகளெல்லாந்தெரிந்து அவள்வீட்டில்சாப்பிட்டுவருகிறதுமறிந்து அம்மாபூவாணிச்சிநீதானெ னக்குத்தாயானவள் உனக்குஎன்னுபாரணமெல்லாந்தருகிறேன் எவ்வி தத்திலாவது பொன்னபரணமுள்ள புருஷனை எனக்குசேரப்பண்ண வேண்டுமென்று அவள்காலில்விழுந்துவேண்டினாள் அப்படிவேண்டி யபாக்ஷாவின் பெண்ணைநோக்கித்தாயேவஞ்சனையில்லாமற்பாடுபடுகி றேனென்று விடைபெற்றுவந்து இராத்திரிசாப்பிட்டுபடுக்கப்போகிற ஆண்வேஷங்கொண்டமந்திரிமகளைப்பார்த்து அப்பாமகனேஉனக்கு வெகுபோகசுகயோகமிகுமாகமுள்ள நல்லசந்தோஷசமாச்சாரங்கொ ண்டுவந்தேன் இந்தவூர்பாக்ஷாமகளானவள் உன்னைக்கலியாணயபண் ணிக்கொள்ளக் கருத்துடையவளாய் விரும்பியிருக்கிறாள் இந்தபா க்ஷாவுக்கு வேறுபிள்ளைகளுமில்லை பெண்ணுக்கு மாப்பிள்ளைதான் தனக்குபிள்ளைஎன்னசொல்லுகிறாயென்றாள் அம்மாபூவாணிச்சித்தா யேநானொருகாரியமஉத்தேசம்பண்ணியிருக்கிறேன் அதுநிறைவேறு கிறவரையிலும் ஸ்திரீகளைதொடமாட்டேன் அந்தக்காரியங்கையகூடி யமாகிவீடுவாகில் அப்பால் கலியாணம்பண்ணிக் கொள்ளுகிறேனென் றான் அந்தச்சங்கதியைப் பாட்சாவின்பெண்ணுக்குப்பூவாணிச்சிசொ ல்லக்கேட்டுஅதுவரையிலுந்தாளாமல்தரையில்விழுந்துபுரண்டழுகிற போது அரண்மனையிலுள்ளயாவருங் காபருபட்டார்கள்.

அதைப்பாட்சாகேட்டு பெண்ணுக்கென்னமோவியாதியென்று வயித்தியர்களை அழைத்துவந்தார்கள் அதைப்பார்த்தபெண்ணானவள் எனக்கென்னத்துக்குவைத்தியம் இதுஉமக்கு பயித்தியமெனறுரைத் துசயித்தியத்திற்குள்ளாய் அசாத்தியமுத்திருந்தாள் அவளது அந்தரங் கத்தைபாட்சாவறிந்துதனதுமந்திரிமந்திரியையழைத்து என்மகள்பிழை க்கும்படியாய்ச்செய்யுங்கள் ஆரோஒருவர்நம்முடையபட்டணத்தில்வ ந்துகடைவைத்திருக்குறாராம அவனைவிசாரித்துஎன்பெண்ணுக்குஇ ணங்கச்செய்யென்றுபேசஅப்படியே மந்திரிமார்களசென்று ஆணுரு கொண்டமந்திரி மகளிடத்தில்வார்த்தையாடியபோது இவர்களுடை ய புத்திநுட்பத்திற்கு மேற்படப்பேசி எனபத்தியத்தைக்கெடுக்காதீர் களென்றாள் அப்பேயத்திக்குப் புத்திக்குஞ்சத்திக்கும்சொக்கிப்போ ன மந்திரிமார்கள்தங்கள்பெண்ணைக்கொடுப்போமென்றெண்ணி வெ ட்கிப்போய் பாக்ஷாவினிடத்தில் வந்து சங்கதிகளைச்சொல்லி அவன் கெட்டிமனதுடையவனாயிருக்கிறானென்றாள் அதுகேட்ட பாக்ஷாவா னவர்நல்லது அவர்விரதத்திற்கியாதொருகுறைவில்லாமல் என்மகளை க்கலியாணம் பண்ணிக்கொண்டு விரதமுடிகிறவரைக்குஞ் சோபன மில்லாம லிருக்கலா மெனச்சொல்லி யழைத்து வாருங்களென்று பின்னு மனுப்பினன் மந்திரிகள்போய்ப் பாட்சாவின் கருத்தைச்

சொல்லி ஐபா நீ ஒருநாவேளை பாட்சாவானாலுமர்வீர் உமக்குநல்லகா லம்வந்திருக்குது எழுந்திருமென்றுகையைப்பற்றியழைத்தார்கள் அப் போழுவாணிச்சியம்மை உத்தரவுகேட்டுக்கொண்டு பாட்சாவின் வீட் டுக்குப்போனான் பாட்சாவானவர்பார்த்துஎமதுபெண்ணுக்குமெமது கண்ணிருக்குங்கருத்தவராகவேதோணுதென்றுமறியாதைசெய்துசாஸ் திரங்களால்நாடுநகரஞ்சிங்காரித்து வைதிகளைகாற்கட்டிவிட்டுபிச்சைக் காரர்களுக்குச்சோறுபோட்டு வெகுசனங்கள்சேர்ந்த கலியாணமண டபத்தில்பெண்ணும்பிள்ளையுமட்காரசெய்து தோற்கருவிதுளைக்கரு வி முழங்கசங்கதொனிகழங்கச்சகலசம்பிரமத்துடன் தாலிகட்டிவைத் துபெண்ணையும்பிள்ளையையும் சோபனவரையிற்படுக்கவைத்தார்கள் அந்தப்பெண்கொடியை ஆணு நவாகியமந்திரிமகளழைத்து சமீபத்தி லுட்காரவைத்துக்கொண்டுநானெப்படியும்உன்னைத்தொட்டுதாலிகட் டினேன் நானுனக்குநல்லபோகங்கொடுப்பேன் இனனஞ்சிலநாள்வரை க்கும் என்னைவிரும்பிமேகங்கொள்ளாமலும் இந்தப்பேச்சைஉன்தா ய்தந்தை யாரறியாமலுமிருக்கச்செய்வாயாகில் பின்னாற்சுகம்பெற்று வாழ்வாயென்றுசொல்ல நல்லது அப்படியேயாகட்டும் அதுவரையிலு ம் என்மோகதாகம் பொல்லாததாயிருக்குது என்றாள் அதற்காகநித்திய மென்னுடன் கூடப்படுக்கையறையிலவந்து வேடிக்கையாய்ப்பேசிக் கொண்டிருந்து நீவேறுபடுக்கை நான்வேறுபடுக்கையாய்ப் படுப்போ மெனறுசொல்ல அதற்கு பாட்சாமகள்சம்மதித்திருந்தாள் ஆண்வேஷ ங்கொண்ட மந்திரிமகளும் அப்படியேயிருந்து மகிமமனோமகிழும்ப டியாய்நடந்து மர்மம்விடாமலிருநது வாழுங்காலையில் சிலநாட்சென் றபிற்பாடு பாட்சாவிறந்துபோனார் அவருக்குரியசடங்குகளைமுடித்து விட்டு சாவுக்காரர்முதலிய குடிபடைகளும் ஆண்வேஷம்பூண்ட இரு பக்தென்னும் மருமகளுக்குப்பட்டங்கட்டி இஷ்டமுள்ளமந்திரிகளுட ன்வாழ்ந்துமகாயுக்தியாகநீதிசெலுத்தி சுகம்பெற்றிருந்தாள் பயேபபி க்கின் தந்தையாகிய பாட்சா இறந்துபோய் சயோரவென்னும் மந்திரி மகளாகிய இருசபக்துபட்டணத்தில் உட்கார்ந்து ராச்சியபரிபாலனம் பண்ணிவருங்காலத்தில அவள்புருஷனாகிய பயேறும்என்னும் இராஜ குமாரன் தனபெண்சாதியுடன்கூடினான்

அதுதெவ்வாறெனில் சயோருவென்னும்பெயரினையுடையமந்திரி மகளானவள் இருக்பக்தென்னும்பேர்வைத்துக்கொண்டு இந்தப்பாட் சாவின்குமாரத்தியையுங்கலியாணம்பணணிக்கொண்டசந்தோஷத்து டன் உலகத்தையாண்டுவருங்காலையில் பகலெக்கெல்லாம்அரசாட்சியி லிருந்து விட்டு இருக்காலத்திற்றனித்திருக்கும்போது தன்னாயகனாகி ய பயேறும் என்பவனுடைய பிரபகம்வந்து மெத்தவருந்துவதினால் அதைச் சகிக்கமாட்டாமல் எப்போதும் இறைவனைத்தொழுது ஆ எ ன்றாண்டவனே நான் இன்னமெத்தனை நாளுக்குத் தனித்திருக்கக்கூ டும் உமதருளாலது என்னாயகன் என்றைக்கு என்னைவந்து சேரும் படிகருச் செய்யுமே நீர் பரிபூரணமனமிரக்கி கடைக்கண்பாருமே

ன்றுகவலையுற்று இந்தக்கவலையைத்தணித்துக்கொள்ளுவதற்காகப்பட்
டணத்துக்குச்சமீபத்திலிருந்த பூந்தோட்டத்திற்குப்போய் புலம்பியி
ருந்தாள் அந்தத்தோட்டத்தில்தினுசுவாரிபுட்பச்செடிகளும்புட்பக்கொ
டிகளும் தண்ணீர்த்துறைப்படிகளும்பச்சிலைகளு மிக்கவாயிருப்பதும
ல்லாமல்லெக்ஷ திலெட்சம்பட்சிகளுமிருந்து பாடுகிறதும் ஆடுகிறதும
பேசுகிறதும்பறக்கிறதுஞ்சிறக்கிறதுமாக எரிகளோடைமுதலியகோ
ப்பிடங்களிலுநிறைந்திருக்கதுகள் அன்றில்அன்னம்ஆந்தைஉள்ளான்
ஊர்க்குருவிதூக்கணாங்குருவி எண்காற்பறவை கருடன் வுகாரிகழு
குகாக்கைஅண்டங்காக்கைநீர்காக்கை காடைகிளி குயில்கொக்கு கூ
கைகேகயம்மயில்குருகுகோழிசம்பங்கோழிசக்கரவாகம் சாந்தகப்புள்
சிச்சிலிவேல்செம்போத்துநாகணவாய் புல் செம்மையினாரை கருநா
ரை பொருநாரை வெண்ணாரை செங்காரை நிலாமுகிபருந்து புறா
கரும்புறா மாடப்புறா மணிப்புறா கொய்வாப்புள்மீன்கொத்திவானம்
பாடி கொண்டலாத்திபூமாராசாமுதலிய இன்னம்பலபலபட்சிகளும்பொ
ருந்தியதைப்பார்த்துக்கொண்டிருக்கும்போதேஒருமணியாக்காக்கை
கூவியது அந்தகாக்கையை நோக்கி ஓ காகம் என்னுகமே போன்ற
மோகநாயகன் என்பாகமுறக்குவாயா உங்களினமானவர்கள் கூவினு
ல் இத்தனைசொல்லுக் கின்னபலனென்றும் இன்னதிசையிற் கூவினு
ல் இன்னபிரயோசனமென்றும் பெரியோர்கள் வாயசவாய்நூலொன்
றொருசாஸ்திரமுண்டு பண்ணிவைத்திருக்கிறார்களே அதேபிரகாரம்
உலகத்திலுள்ள ஸ்திரீகளுக்குறிப்பாகச் சொல்லுகிறார்கள் இதுவுஞ்
சரியாய்நடந்தேறிவருகின்றது அழகியகரும்பிள்ளையே நீ இப்போதும்
என்புருஷன்வரக்கூவுவையாகில் உன்மூக்கைமாணிக்கம்முதலிய மரக
தத்திலிழைத்துஉன்னிருக்கைகளும் ஆணிப்பொன்ன பாஞ்சியலங்கா
ரஞ்செய்து உன்கால்களுக்கு வச்ரத்தண்டைகொலுசணிந்து உன்விர
லுக்குமுத்துமாலைகொடுக்கிறேன் முற்றும்பாலுடன்பழமும்சோறும்
கொடுக்கிறேன் இன்னொருதரமென்னிறைவன்வரக்கூவாய் இணைபிரி
யாவென்னேர் நல்வரக்கூவாய் என்னிஷ்டதெய்வமானகருங்காகமேநா
ன்படுவதுமிகுந்தசோகமேயென்று கண்ணீர்ததும்பகசிந்துமனம்நொ
ந்துசிங்காரத்தோப்பிற்றியக்கித்திரிந்து தனித்துச்சலித்துசஞ்சலமுற்
று வாடிவருந்திவரும்வேளைதன்னில் தாடியுமீசையுமதலை மயிர்க்காலு
ம்கானகத்துணிபோர்வையுங் கம்பிளிப்போர்வையும்கடியும குடையுங்
தாழ்மிதியடியும் புலித்தோல் மான்றோல்போர்த்தமார்வைரமலங்கோ
டுகோவண நாட்டியவிடையும் ஒப்ங்கருடைய மொடுக்கமுமுறக்கமும்
பாவியுடுக்கையுங் கஞ்சாகுடுக்கையுங் கழுத்திற்கட்டு ருத்திராட்சமு
ம்சாம்பற்பூச்சுஞ் சன்னுசிபபேச்சும் பாம்புப்படம்போற் பகர்யோகப்
பட்டையும மாத்திரைக்கோலும மயிற்றோகைவாலும் எழுதியஏடும்
இரந்துண்ணுமோடும்கையிற் படுத்துக்களைத்துப்படுத்திருந்தபரதேசி
யைபாட்சாவாயிருக்கிற மந்திரி மகளாகிய சயோராகண்டு கிட்ட நெருக்
கிலேமடக்கி ஆரையா நீங்களென்று கேட்க உடனே அந்தப்பர
தேசி உபசாரஞ்செய்து பாட்சாவே நான்பாவியாகிய பரதேசி ஊரி

விசனன்றுமபயோகமற்றவனென்றான்மந்திரிமகளானவள் நீசொல்
லாமல்வெறுத்து இந்தக்கோலங்கொண்டவதற்கு இத்தனைவெறுப்புஞ்ச
லிப்பும்வருவானேனென உம்மைப்பார்த்தால் லோகவியாபாரம்நீங்கியபா
ம்பரையாண்டியாயிருக்கவில்லைபஞ்சத்துயாண்டியானதுபோலிருக்கு
தென்றாள் அவளிதுசொல்லியதைக்கேட்ட துறவியானவன் சற்றுநோ
முகத்தைப்பார்த்து இவ்வளவுபுத்தியும்யுக்தியும்நமக்கிருந்துதானேஎ
ல்லாமிழந்து இச்சுகியானேனும் நமது காட்டிலிருந்தால் நாமுமிவரைப்
போல்பாக்யவானாயிருக்கலாமென்றெண்ணி கண்ணீர்சொரிந்தான் அந்
தநோக்கத்தைக்கண்டமந்திரிகுமாரியானவள் இதிலேதோசிலகாரியமி
ருக்குமென்றுசந்தேகங்கொண்டுஐயா பெரியவரேநீர்பிறந்ததேசமெது
உமதுபெயரின்னதுநீர் துக்கியனத்தையுஞ்சொல்லுமென்றுகேட்டா
ள் அதற்குச்சந்நியாசி உலகாட்சகனேகறந்தபால்முலைக்கேறாது இற
ந்தவுயிருடற்கேறாது துறந்தபேர்நாட்டுக்குவாரார்கள் மறந்தஞானம்வ
ழிகாட்டாதென்றிருப்பாரதலால்நான் துறக்கவுமில்லை இறக்கவுமில்லை
என்தேகத்துக்கணியமாமாணிக்கமணியையிழந்து துடித்துப் பாதவி
த்துச்சுகமோவெறுக்குக்குறைபொருந்தச்சோம்பித்திரிகிறேனென்
துயரத்தைக் கேட்பீராகில்நீருந்துயரப்படும்படியாகும்பாட்சாவேநீர்ந
ல்லபூசைபண்ணியநாயகனைதலாலிந்தப்பாவியினபெயரையும்பிறப்பை
யுங்கேட்டுவீணவிசனப்படவேணடும் அதைத்தள்ளி அப்பாற்பேசுமெ
ன்றுரைத்தான் மந்திரிமகளானவள் நல்லது சித்தபுருஷனே அதெப்பே
ர்ப்பட்டதுயரமுண்டாகியது அதைத்தான்பார்க்கவேணுமென்றுசொ
ல்லச்சொன்னான் அதைக்கேட்டசன்னியாசி சொன்னயம்பொருணயந்
தெரிந்தபாட்சாகுமாரனையால்கொஞ்சமயங்கி தன்னிலுமிச்சையஞ்ச
ஞ்சலத்தைவாய்விட்டுச்சொல்லத்தொடங்கினான்.

—()—

இப்போதுபாட்சாவாயிருக்கிற மந்திரி
மகளாகியசயேராவுக்குநாயகனாகிய
பஹேராமென்னும்பரதேசிசொ
ல்லுகிறபழமைசரித்திரம்

—( —

இந்நகரத்துக்கெஜமானாகிய இறைவனே என்குறையைச்சொல்
லக்கேளும் மாளுவபெர்க்கமென்னுந் தேசத்தையாண்டவியாகர்மப
ராக்கிரமனென்றொரு பாட்சாவின்குமாரன் தாங்கியபாக்யனென்னு
மந்திரிகுமாரத்தியாகிய சயேராவென்பவளுநாளுமொரேநாளிற்பிறந்து
வளர்ந்துபள்ளிக்கூடத்திற் படித்து ஆசைபிடித்துவரும்போது பெரி
யவர்களாகிய தாய்தந்தைமுதலியவர்கள் எங்களிருவரையும் பிரித்துவிட்
டார்கள் அதனாலருக்கு வேறுபட்ட மந்திரி களுக்குத் தூதுவி

ட்டு என்கிறதையின்படி அவளுடனும்புறப்பட்டுக்கா டுவழியாக
ஒருவனத்திற்படுத்து இளைப்புடனித்திரைபோனவளைக்கண்டவனிக்குரா
த்திரிமுழுதும் விழித்துக்காவலிருந்து பெரும்புலிவரக்கண்டு அதைப்
பின்றொடர்ந்துபோய்ப்பொழுதுவிடியும்வேளையிலப்புலியைக்கொன்
று திரும்பிவழிதெரியாமல் அலைந்துமதிகெட்டு விழித்துவருந்தப்பட்
டுப்பயித்தியம்பிடித்துவாடியோடி வனமலைமுகடுகளிலெல்லாம்போதி
ல் ஒருபெரியவரெனைப்பிடித்துநமதுவீட்டுக்காக்கள் என்பதையொ
ழிக்கத் தனைப்போலெல்லாச் சடையாண்டியாக்கி சேர்ந்துபோட்டு
வேலையாக்கிக் கொண்டிலர்த்து அவரிடத்திலகப்பட்டநான்சிலநாளி
ருந்து தேசதேசமாய்த்திரிந்து அவர்செத்தபிற்பாடு மெத்தவருந்தியவ
ருடையமுத்திரையெல்லாம் விட்டுவண்ணமானைச்செய்யமாடமாளிகைத்
தாமரையிலைஅழகியதானகதையிலே முயெனுடைச்சொழிலே மனதுக்கரிய
சத்தராத்தவனை முதன்மந்திரிகருடியமகளைத்திசையெல்லாந் தேடிப்ப
ரையுமவடி. இப்பெற்ற உன்தோட்டத்திடைவந்துற்றனன் என்பெ
யர் பலேறாவனைபார்கள் இவனுடைய வரலாறென்றுரைத்திறை
த்தழுதன் இவன்பேச்சைக்கேட்டு சபோராவென்னுயர்திரிமகளானவ
ள் சிந்தைகலங்கிக்கண்ணீர்பொழிந்து இடம்விடாமற்றுயரத்தை மறைந்
து ஆப்பர்தேசியாரே நீர் கவலைப்படவேண்டாம் உமதுகுறையைநானே
தவிர்க்கிறேனென்றுவிசனமென்னக்கொருபெரிதல்லநானென்னமோபா
ட்சாவாயிருக்கிறேனென்று விசனமற்றவனென்றும்நினைக்காதிர்உன்கு
றையைச்சொன்னால உன்குறைபறந்துபோய்விடும் ஆனாலிககவேளையி
ல்சொல்லவெனக்கிஷ்டமில்லை நீரின்னுஞ்சிலநாளில்விடத்திலிருப்பீர
தில் என்துயரத்தையுங்காட்டி உனதுயரத்தையுமோட்டி விடுகிறேனெ
ன்றுரைத்துதனது மந்திரிமுதலாகியவேலைக்காரரையழைத்து இந்தப்
பெரியவருக்குராஜோபசாரஞ்செய்து பத்துபதினைந்து நாளைக்குள்ளா
கப்பரதேசிவேடத்தைமாற்றி பாட்சாவேடந்தரித்து விடுங்களென்று
செவ்வையாய்த்திட்டப்படுத்தும்படி யாக்கியாபித்தனள்அதைக்கேட்
டயாவருட்பாட்சாவின்பார்வைக்கெதிரில் ஆரோவொருசக்கியாசிவந்தா
ன் அவனுக்குயோகம்பிடித்து அதிஷ்டம்வந்தாலிப்படியல்லவா வருக
வேணுமெனறுஊர்நாடெல்லாம் உலகோதிப்பதுபோற்கொதிப்பதை
அந்தவூர்பாட்சாமகளாகியப்பயேபயிகசர்கேள்விப்பட்டு தாளமாட்டாம
ல் தனனைக்கலியாணம்பண்ணிச்சோபனமில்லாமல்விரதந்திரவேணும்
பிற்பாடு சோபனம்பண்ணுகிறேனென்று சொல்லியிருக்கிறமந்திரிமக
ளாகிய சபோராவென்பவள் ஆணுருக்கொண்டு பாட்சாவாயிருந்துபட்
டணத்தையாண்டுவருகிற தன்புருஷனைப்பார்த்து ஓபாட்சாவே நீரே
தோவிரதங்கொண்டிருக்கிறதாய் சொன்னீர் அதைக்கேட்டுஎன்பாலிய
இச்சையைப் போக்கிஉன்னைநம்பியிருந்தேன் நீரிப்போது ஆரோவொரு
சந்நியாசியைச்சேர்த்துவைத்துக்கொண்டு அவரிடத்தில் சிலஞாயங்க
ளுமஞாயங்களும்பேசி அவனைப்பாட்சாவாக்கும்படியுத்தரவு பண்ணி
யிருக்கிறீராம் அதுவுமேன்னன்யோசிக்குமிடத்தில் நீர்கொண்டிருந்த வி

ரத

ரதம் என்னைபெண்டாளாமல்விட்டு இவருடன் கூடபோய்விடுவதற்
கோளனைக்கொன்றுதெரியவில்லைநீர்உமதுகருத்தைசொல்லுமென்று
ஆசையுடனேமறுதுசொல்லினள் அவளுடைய கண்ணீரைத்துடைத்து
இவ்வளவேனோகாளையிருந்தபெரியவர்தான் இவருடன்கூடும்போது உ
ன்னைத்தனியே விட்டுவிட்டுக்கூடபாட்டேனெ உன்னுடனேசேர்ந்துகூ
டுவேனென்வயனைக்கிரியோமாவை இப்பம்பத்துதினத்தில் உன்சித்தங்க
ளிக்கசெய்வேனென் மெத்தவருத்தப்படாதேயென்று அவளுக்காசை
வார்த்தைசொல்லிவிட்டனைபிரதேசங்களெல்லாம்அலங்கரிக்கசெய்து
விகாரமுதலியவிடங்களும்சீர்திருத்திச்சித்தியமும சிங்காரவனத்தி
ற்குப்போயபெரியவரைப்பார்த்துக்கொண்டு அவருடனொன்றும்பேசா
மலிருந்தாள் அந்தபாதேசிகருந்தேவாவுபசாரநடத்திவந்த செல்வசிற
ப்பினால்தேகம்பளபளவென்றழகிட்டுதிரகவிசாலவருகண்ணும் சிங்கா
ரமுமபருதமார்புமுயர்ந்ததோளுமபருத்தவயிறும் ஆசானுபாகுவிய
கரமுமா இவ்விதபேச்சுமஎழிறதைகவிச்சும்ராஜடிக்தபருவம பெறவிளங்
கியபழுபசொரூபத்துடன் பார்த்தவர்மனக்குக்கிறபருவத்தைகண்டுபா
ட்சாவுக்குள்ளகப்பட்டு பட்டாவளிமுதலியசரிகைச்சாதராக்களும் ம
ணிமகுடமேசூரகுண்டலமகரபாசிபந்தடன்மோதிரங்களும் ரசபோ
திராசகளும அரைபட்டிகைபுஜகீர்த்தியும்காருமாலை முத்துமாலை
வச்சிரமாலைமரகதமாலைமாணிக்கமாலை ஆணிப்பொன்மாலைரத்தினப்ப
தக்கம்கம்பிபதக்கமமுமகாளிபதக்கமமகாகண்டிகைமுதலாகிய ஆப
ரணங்களுந்தரிப்பித்து சிங்காரவனப்பங்களாவிற் சிங்காசனத்திலவை
த்து தனனிருகண்களுந்தமைழுபக்குளமுயப்பார்த்து சவாரியேறிஅரண்
மனைக்குவந்துதான்கொண்டிருந்தபாடசாவேஷத்தைமாற்றிசமபங்கித்
தயிலஸ்நானம்பண்ணி பழையமந்திரிமகளுருவெடுத்து சிவிவகுத்தசிக்க
றத்துகளுச்சிட்டுகெருட்டிவிட்டு கோதறுமாலைவிட்டுகொண்டையிட்டுச
கலாபரணங்களும்பூண்டுசந்தனபாவிதருக்கு மபகுராசாந்துபுனுகு சவ்
வாதுபன்னீர்கலவைப்பொடிமுதலியதும்தரித்து இந்திரலோகத்துச்சி
யும் நாண்பயேபயிக்கவென்னும பாட்சாவின்குமாரத்தியின் படுக்கையெ
றைக்குள்வந்தாள் இவனைபார்த்தவுடனேபயேபயிக்கவென்பவள் பயந்
து ஆரோதெய்வப்பெண்ணென்றுமதியக்கித்திக்கென்றெழுந்து கால்
மேல்வீழ்ந்து ஆரம்மாதாயேஎனக்கின்னாரென்றுதெரியவில்லையே யெ
ன்று அவதிப்படுவதைக்கண்டமந்திரிமகளானசயோபார்த்துநான்தா
ன்உன்னைக்கலியாணஞ்செய்தகிரேதப்க்தென்றும் மாறுபெயர்பூண்ட
பாட்சா என்விரதநிலைய 9றகு உன்னைச்சோபனம் பண்ணவந்தேனெ
ன்றுதப்பிரமையவடைந்து ஒன்றுந்தோன்றாமற்சற்றுநேரமிருந்து நீஇது
வரையிலும்ஆண்பிள்ளைபோலிருந்துசிங்காசனமேறிஉலகத்தைஆண்
டுஎன்னையும் பெண்டாக்கிக்கொண்டபுருஷவுருவம போய்ப்பெண்ணு
ருவானமென்ன உன்னுடையபூர்வோத்திரத்தைச் சொல்லவேணுமெ
ன்றுபொருமலுடன்கேட்டாள்

அதற்குமந்திரிமகளாகியசஹோராவென்பவள்பயேபயிக்களைக்க
ட்டிமுத்தமிட்டு என்சங்கதியெல்லா முனக்குச்சொல்லுகிறேன் நீசீக்கி
ரம்அலங்காரம்பண்ணிக்கொண்டுபுறப்படென்றுசொன்னவுடனேப
யேபயிக்காளவள்வெகுவிசேஷலங்காரங்களுடனே புறப்பட்டாளவி
ருவரும்பல்லக்கேறிக்கொண்டுசிங்காரவனத்திற்சென்று முதன்மந்திரி
முதலிய சேனாதிபதிகள்கிராமக்குடிகள்பெரியதனக்காரர் ஜோசி
கள்குருக்கள் சாஸ்திரிகள் அதிகாரிகள் அன்னியதேசத்தாரசனை இவர்க
ளெல்லாரையும்வரவழைத்துப் பெரியசபையைக்கூட்டி அந்தசபைக்கு
நடுவிலதானேநின்று சலதிராஜனையுங்கைபிடித்துவணங்கி ஆணுடன்
பெண்ணுடன்பிறந்தகுமாரே வையகத்தோரே இயாவருங்கேளுங்கள்
நான்மாறுவேஷமென்னுகதேசத்திராஜனுடைய முதன்மந்திரிமக
ளென்பெயர் சஹோரானாணும் இதோசிங்காசனத்திலெழுந்தருளியிரு
க்கிறபயேஹோராவென்னும்பாட்சாவின்குமாரனும்பள்ளிக்கூடத்திற் படி
த்து சூரியனுங்கிரணமுமேனமுமின்னலும்போற்கலந்து நேசித்திருந்
தோம் எங்களுக்குப்பருவமவந்தபோது குலாச்சாரமுறைமைப்படிக்
கு ஆணுடன்பெண்பேசாமற்பெண்ணுடன் ஆணபேசாமல கட்டுப்பா
டிட்டார்கள்உலகவழக்கப்படிகலியாணமபண்ணும்படி என்ணியபோ
துபாட்சாகோபித்து இவனைநீக்கிவிட்டார் இவர்பரதேசம்போகப்பு
றப்பட்டார்எனக்குச்சமாச்சாரந்தெரிவித்தார நானுக்கூடப்புறப்பட்டு
விட்டேனாராத்திரியெல்லாம்நடந்து ஒருகாட்டில்வந்தவிடத்தில் என்
னைவிட்டுப்பிரிந்துபலநாளுந்திரிந்துகமபிளிவேடங்கொண்டு இப்போ
திவ்விடம்வந்திருக்கிறஇவனைத்தேடிப்புறப்பட்டேநான் பெண்ணுவாயி
ருந்தாற்கண்ணிற்கண்டவர்களெல்லோரும் அசனுக்கோபியர்க்களெ
னதுகற்புக்குப்பழுதுவருமெனறநினைத்து இவருடையஆடைகளால்
ஆணுருக்கொண்டு ஷரேதபந்தேனுமவேறுபோதரித்து காடுசெடி
யெல்லாந்தேடிவருங்காலேயில் இன்னதேசத்திராசன்தடவிகட்டிபசத்
திராதிபன்என்னைக்கண்டு தன்பட்டணங்கொண்டுவந்துவைத்துமேடி
க்கைகளைக்காட்டி என்னைப்பலவிதத்திலுஞ்சோதனைசெய்தான் அனே
யவமானப்படுத்தி மூக்குங்காதுமறுக்க இரேமுகன்மைக்காரத்துக்குவ
ந்துபூவாணிச்சிவீட்டிற்பொருக்கிக்கடைவிதியிற்கடைவிற்றுக்கொண்
டிருக்கும்போது இந்தபயேப்பிக்கையென்பவள் என்மேல்மோகங்கொண்
டு நீங்களெல்லோருமறியக்கல்யாணஞ்செய்துகொண்டாள நானும்பெ
ண்ணானபடியால்விரதமிருக்குதென்று சோபனம்பண்ணாமல்மாற்றிவ
ந்தேனை இவள்தகப்பனிறந்துபோனபோது நீங்களியாவருங்கூடிஎனக்
குஇப்பட்டங்கட்டிவைத்தீர்கள்என்னுயானுக்காக இப்பட்டணத்தை
யிதுவரையிலுங்காப்பாற்றி வைத்திருந்தேன் இதோமதாண்டவனுதவி
யினாலஎன்கணவன்வந்தார் இனிஇந்தப்பட்டணம் இவருக்குச்சொந்தம்
நானுமிந்தபயேபயிக்கரும் இவருக்குமனைவியாயிருந்து வாழவேண்டி
யது இதற்குநீங்களென்னசொல்லுகிறீர்களென்றுகேட்டபோதுயாவரு

மெழுந்து ஆனந்தமடைந்துசுவாமியைத்தொழுது அப்பொழுதேபங்கே
சாவென்னும்பார்சவுக்குசாசோவெனனும் மந்திரிமகளையும் பயேப
யிக்கரென்னும்அரசியையும்மங்களநாமாய் விவாகசடங்குகைநடத்திவா
ழ்ந்தினர்கள்அப்பொழுதுபங்கோசெழுந்து ஆஆஆ என்னுடைச்சரு
மமே அழியமனமே அனபானகுணமேயென்று ஆவிங்கனஞ்செய்து
பயேபயிக்கென்பவளையுஞ்சேர்த்தணைத்து இயானையின்பேரிலம்பாரி
வைத்து இரண்டுபேரையுமாருடனேறி இடங்கையைடுக்கை உறுமிதம்பட
டைபேரிகைமத்தளம்முரசுமுருடுபழூவுஅரிடம இயமகருவிகாண்டாம
சேனைத்தடைதவுண்டைகருணிதமகளைக்கடரிதரியம்பறை மேளஞ்
சமைபூரிஎக்காளைசின்னம்சங்குகள்முதலியவாத்தியமுழக்க சகலரு
ம்வெருவுக அரண்மனைபோய்ச்சேர்ந்து இயாவருமகூடியுண்டு வெகுமதி
கொடுத்துசந்தோஷத்துடன் சோபனமூட்டகதிதுணைத்தனஞ்செய்து
பூவாணிரசிக்குப்போது மானகிராமமும்பூமியும்விட்டுதங்கள் தாய்தக
பபயர்களுக்குதிருமுகமெழுதிஅவர்களையும்வருவித்துமந்திரிராசன்
முதலாகியமன்னவர்களுமபங்கோசுபயேபயிக்குமுகல்யமபனையும்பார
த்துப்பூரித்துப்பலநாளிவ்விடத்திலிருந்து அப்பாலவர்கள்தங்களநகா
ம்போய்ச்சேர்ந்தார்கள் இப்பாலிவர்கள்முப்பபோகம்விளையும் அப்பூமி
யில்லைப்போதுமேக்காகசெல்வத்துடனசுபத்திரனைப்பெற்று சுகமாயவா
ழ்ந்து தியாகராசசகாலவர்போற்றமழதிருந்தார்கள்மேலும்சகாநதாறு
க்ஷாவேயென்றுகிளியானதுசொலலஇக்கதையைக்கேட்ட அரசகுமார
னமகிழ்ந்துபுகழ்ந்து ஆகிளியே இவ்விதமாயெனக்குகிடைப்பாளாநா
ளினைத்தயாயவமென்றேகஙியினெனுருகதைசொலமெலன்றுகேட்டான
அப்படியேகிளிசொலலத்தொடஙகியது

———

சஹாரகாநுஷாவுக்கு கிளிசொல்லிய

மூன்றாவதுகதை



இந்ததேசத்திலிருந்து அஜனென்னுமவர்த்தகன் சிலசரக்குகளைக்
குதிரையின்பேரிலேற்றிக்கொண்டு இதனொருதேசத்தை நாடிப்போ
லகையில் ஒருகாட்டுவழியேரிட்டுபோட்டைத்தெரியாமலபாதவிதது நடக்
கும்போதுகைமே ஒனறுமலையசைத்துமலைமேற்குதிதது இவனை
திரித்ருவிக்குதாக்கிவருவதைக்கண்டு உரத்தசதத்துடனகூவிபல்லய
மெடுத்து அர்தமானைததுரத்திநெருங்கநதுரமோடினான் அந்தக்கலைமான்
இவன்கையிலகப்படாமற்றலைதூரமபோயமறைநதுவிட்டது அதனால
வருந்தித்திரும்பியவர்தனதுநெரிலதிருந்தியநெடுதியுள்ளஒருசிலகா
ரவையைபெருத்தியபடங்குபகளாலும்பெரியவிட்சகளாலும சொடியு
ஞ்செடியுமகுலாவியிருபபதாலும குணமுமணமுங் கூட்டிய
பனிமதுக்கென்மாளிகையொன்றிருந்தது அதமாளிகையில் செங்தி
ருவுக்கொப்பானஒருசந்திரமுகதபெண்ணிருந்தாள்

பானையைக்கொட்டி கையைப்போட்டுப் பிசையுமுன்னமே கலசத்தி
லொன்றுமிராதுமறுபடியும் பானையிலுள்ளதைத்தேடுவாள் ஒருவாய்
தின்னுமுன்னமேகிண்ணிவெறுங்கிண்ணியாயிருக்கும் அப்பாவியவளுக்
கும்பசியடங்காமல்கவிட்டை நொய்யைக்காய்ச்சிக்கஞ்சியுடன்கலக்கிக்கு
டிப்பாள் அப்பவும்பசியடங்குவதில்லை இப்படிவெகுநாளாய்மெலிந்துவ
ருகிறாள் அப்படியிருக்குநாளையிலொருநாள் சோழவேளாளனொருவன்
யாத்திரைபோய்வந்துசமையற்செய்து சாப்பிடுவதற்குஇந்தஊரிலேசைவக்
காறவீட்டிலிருக்கிறதாவென்றுவிசாரிக்கான் இந்தகூலிக்குத்துகிறவள்
வீட்டைக்காட்டினார்கள்;

அவ்விடத்திற்போயிரவிற்சாணங்கரைத்துத்தெளித்துவிடுசுத்தி
செய்துசமையற்பண்ணிகுழம்புமுதலியபொரியலுமேற்படுத்தியிரண்
டுதட்டுக்குவிளக்கெண்ணெய்வாங்கிவந்து தலைக்கடையிலொரு விளக்கு
புறக்கடையிலொருவிளக்குஞ்சைவக்காரியிருக்கிறவீட்டிலுங்கூடத்திலு
மிரண்டுவிளக்குவைத்துவிட்டு நித்தியானுஷ்டானங்களைமுடித்துதானு
ம்புசித்துதாம்பூலமபோட்டுக்கொண்டு சற்காரிலுட்காரந்திருந்தான் அ
ப்போதந்தஅம்மையாரானவள் மாமூற்பிரகாரம இரண்டுபடியரிசியை
யுமடித்துக் கிண்ணியைக் கழுவி வைத்துக்கொண்டு அனைத்தைக்
கொட்டி பிசைவதற்கிசைந்தாள்கிண்ணியில அன்னமைப்படியேயிருக்கு
து கிண்ணத்திண்ணமாளாமலிருக்கக்கண்டு வெவிட்டிப்போய் மீதிச்
சாதமபானையிலிறைய விருப்பதை தண்ணீருற்றிவிட்டு மறுபடியுங்கிண்
ணியிலிருக்கிறசாதத்தைக்குமட்டிகுமட்டி புசிக்கிறதைக் கண்டசைவன்
என்ன அம்மா சாப்பிடுகிறதுக்குமெத்தவருத்தப்படுகிறீ யென்றான்
இவ இதுவரையிலும் நடந்துவந்த குறிப்பைச்சொல்லி இன்றைக்கு
ஆக்கினசோறு அகலழியாமலிருக்குது நானெனனசாப்பிட்டாலுமஅ
டங்காப்பசியாயிருப்பதுபோய் இன்றைக்கு ஆவலடங்கியிருக்குதென
றாள் அதைக்கேட்டசைவன் அப்படியாவென்று கேட்டுக்கொண்டிரு
க்கும்போது வெகுகாலமாயிவளுடனிருந்து சாப்பாட்டைப்புசித்துவ
ந்தபேராக்கன்வேள்பார்த்தனென்று இரண்டுபேய்களுண்டு அதுகளி
ரண்டுமே வழக்கப்படி அன்றைக்கும் வந்து வெள்ளாளன் கொளுத்திய
விளக்கினால்உள்ளேவரமாட்டாமல் தெருமரத்திலிருந்துஆரக்கேபோ
ருக்கபாரிக்கேவென்றுவேள்பார்த்தனென்னும பைசாசஞ்சொல்லஅ
டா இந்தச்சோழவேளனுயே பாவிநம்மைக்கெடுத்தானென்று சொல்லி
யதைக்கேள்விப்பட்டசோழவேளாளன்குருட்டுப்பேயையுந்திருட்டுப்
பேயையுந்தாத்தியடித்துஉரத்துக்கூவி இந்தக்கூலிக்குத்துகிறவளிட
த்தில்வந்துஅடியம்மாநீயிதுவரையிலும்விளக்கேற்றிவைத்துண்ணாமை
யால்இரண்டுபேய்கள்உன்னுடன்கூடவிருந்து செவ்வையாயுண்டு சா
ராயங்குடித்தவர்போல்மயங்கி என்னைத்திட்டிக்கொண் டோடிப்போய்

